


துணிகளை அடித்துத் துவைக்காமலே வெண்மையாகவும்
பிரகாசமாகவும் சலவை செய்கிறது!

S. 148-50 TM

நீங்கள் சுவாசிப்பது போலவே
தானாகவே சாவி இயக்கிக் கொள்ளும்!

# ETERNA·MATIC

## எடர்னு - மாடிக்

### பால்பேரிங் மூலம் தானாக சாவி இயக்கிக்கொள்ளும் முதல் ஆடோமாடிக் கடிகாரம்




பால் பேரிங்குகள் அமைக்கப் பட்டு தயாரிக்கப்பட்ட முதல் கடிகாரம் எடர்னு-மாடிக் தான். இந்தப் புதிய எடர்னு-மாடிக் கடிகாரங்களை பொதுமக்களுக்கு வெளியிடுவதற்கு முன், நான்கு வருஷ பரிசீலனை செய்த பிறகு வழங்கப் பட்டன.

எடர்னு-மாடிக் கடிகாரத்தின் பால் ரேஸில் ஐந்து சின்னஞ் சிறு கோலிகள் இருக்கின்றன. இதனால் எவ்வித உராய்ப்பும் ஏற்படாமல் எக்காலத்திற்கும் தானே சாவி இயக்கிக் கொள்கிறது.

இந்தப் புதிய எடர்னு-மாடிக் கடிகாரங்களை உங்கள் பேவர்-லூபா டீலர்களிடம் பாருங்கள். அல்லது விவரமான பிரசுரத்திற்கு எழுதுங்கள். விலைகள்: ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் கேஸ் ரூ. 340. ரோல்ட் கோல்டு முகப்பும் பின்புறம் ஸ்டீலும் உள்ளது ரூ. 396.

WATER-PROOF
SHOCK-PROOF
ANTI-MAGNETIC

### முக்கியமான பகுதி

ஒரு அணா நாணயத்திற்கெதிராக காட்டப்பட்டிருக்கும் ஐந்து சிறிய எஃகு கோலிகளே எடர்னு-மாடிக்கின் சாவி இயக்கும் முக்கிய சாதனமாகும். எடர்னு-மாடிக்கின் இயந்திர ஓட்டம் முழு வட்டத்தில் வலது புறமாகவும் இடதுபுறமாகவும் ஓடுகிறது. சிறிய அசைவு, மேலின் ஸ்பிரிங்கை சப்தமோ அதிர்ச்சியோ இல்லாமல் சுற்ற வைக்கிறது.

### மற்ற ஆடோமாடிக் கடிகாரத்துடனும் இதை ஒப்பிட்டுப் பாருங்கள்

1. வலது புறமும் இடது புறமும் சுழலும் கனமான எடையின் உராய்ப்பில்லாத ஓட்டம்.
2. சுபேர்வையுடன் 360 முழுதும் அசையும் பாரம்.
3. 40 மணிக்கு வேண்டிய விசை சேர்த்துக்கொள்ளும் இயல்பு.
4. அசைவின்றி, சப்தமின்றி சுலபமாக சாவி இயக்கிக் கொள்வது. பம்பர் ஸ்பிரிங்குகள் கிடையாது.
5. உழைப்பில் மிகவும் சிறந்தது.

FAVRE-LEUBA

# FAVRE-LEUBA

பேவர்-லூபா & கோ., லிட்., பம்பாய் - கல்கத்தா

Look for this ETERNA·MATIC Symbol on the dial

Stronachs

ஷாலிமார் தயாரிப்புகளை ஆர்டர் செய்யும்போது எந்த வேலைக்காக என்பதை தெரிவிக்கவும்.






ட்யூராடால் 46 அழகிய வர்ண வரிசைகளில் கிடைக்கும். உட்புற வெளிப்புற சுவர்களுக்குப் பூச இதைவிடச் சிறந்த கழுவி விடக்கூடிய எண்ணெய் சேர்ந்த டிஸ்டெம்பர் கிடையாது. ட்யூராடால் அழியாது. தண்ணீராலும் அழிக்க முடியாது.

அடித்தாற் போல் சொல்லுங்கள் ஷாலிமார் ட்யூராடால்

எண்ணெய் சேர்ந்த கழுவிவிடக்கூடிய டிஸ்டெம்பர்

**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.,**

**Post Box 136, Madras 1. Importers & Distributors for Ceylon :**
**Lewis Brown & Co., Ltd., Post Box 85, Colombo**




மூப்பது வயதுகூட நிரம்பாத போதிலும் அவள் வயது சென்றவளாயும் நோயாளியாகவுமே காணப்பட்டாள். பள்ளியிலும், கலாசாலையிலும் அவள் ஒரு வீராங்கனையாகத் திகழ்ந்தது அவள் சிநேகிதிகள் மட்டுமே அறிவர். பெரு மூச்சும் இரைப்புமாக அவள் தெருவோடு செல்வதைப் பார்த்த அன்னியர்கள் நம்பவில்லை. ஆனால் அவளது ஊளைச் சதை யெல்லாம் கரைந்து மறைந்த பின்னர் 10 வயது குறைந்து யௌவனத்துடன் காணப்பட்டாள்-அதன் ரகசியம்-"க்ருஷன்."

இயற்கையான அழகிய தோற்றத்தையும் யௌவனத்தின் சோபையும் பெரிதாகப் பாவிக்கும், ஆனால் ஊளைச் சதையினால் அவதிப்படும் ஒவ்வொரு ஸ்திரீயும் இவ்வார்த்தைகளை நன்கு கவனிக்க வேண்டும்.

க்ருஷனில் சேர்ந்துள்ள ஆறுவித இயற்கை லோக சத்துக்கள், சரீரத்தின், ரத்த ஓட்டத்திலிருந்து வடிகட்டப் பட்ட விஷங்களையும், ஜீரணத்திற்குப் பிறகுள்ள கழிவு பதார்த்தங்களையும் வெளித் தள்ள, அவயவங்களுக்கு உதவுவதன் மூலம் ஊளைச் சதையின் மூலகாரணத்தை எதிர்த்துப் போராடுகின்றன. கழிவு பதார்த்தங்களும் விஷப் பொருள்களும் அபரிமிதமாக ஒன்று சேரவிடப் பட்டால் உடம்பின் ரசாயனக் கலவை மூலம் கொழுப்பாக மாறுகின்றன. தொடர்ச்சியாகக் கொஞ்ச காலம் க்ருஷன் உட்கொண்டால் அது அதிகப்படியான பளுவைக் குறைத்து, மூத்திரக் காய்கள், சரல் குடல்கள் இவற்றின் இயற்கையான சலனத்தைத் தூண்டுகிறது. ரத்தம் சுத்திகரிக்கப்பட்டு ஆரோக்கியம் ததும்புகிறது. யௌவனத் தோற்றத்தைப் பெறுவதோடு யௌவன உணர்ச்சியையும் பெறுகிறீர்கள். அதாவது நீங்களும் அந்த க்ருஷன் உணர்ச்சியை அடைகிறீர்கள். முதலில் ஒரு பாட்டில் வாங்குங்கள். உங்கள் கடைக்காரரிடமும் கெமிஸ்டுகளிடமும் கிடைக்கும். "க்ருஷன்" விலை ரூ. 1-10-0.

"க்ருஷன்" ஈ க்ரிபித்ஸ் ஹியூஸ், கோ., லிட் (மாஞ்செஸ்டர், இங்கிலாந்து) அவர்களால் தயாரிக்கப்பட்டு கார்டீ கம்பெனி, லிட்., பம்பாய், மதராஸ் (கல்கத்தா.) அவர்களால் விநியோகிக்கப் படுகின்றன.




## நீங்களும் அந்த க்ருஷன் உணர்ச்சியைப் பெறலாம்




பத்மா: மாமி, நான் வீட்டுக்குப் போக வேண்டும். அவர் வருகிற நேரமாயுடுத்து. நான் வீட்டிலிருக்கும் பொழுதே எள்ளும் கொள்ளும் வெடிக்கும். கதவு பூட்டியிருந்தால் பின் கேட்கவா வேண்டும். வந்ததும் ஈஸிச்சேரில் 'அப்பாடா' என்று உட்கார்ந்துவிடுவார். அவ்வளவு களைப்பு.

ஸீதா: இப்படித்தானடி உங்க மாமாவும் செய்துகொண்டிருந்தார்.

பத்மா: மாமாவுமா உங்களிடம் கோபித்துக்கொள்வார்?

ஸீதா: இப்போ இல்லையடி. அதெல்லாம் ரொம்ப நாள் முந்தி. இப்பொழுது என்ன வென்றால் ஆபீஸிலிருந்து வந்ததும் ஒரு கப் நல்ல 'டீ' சாப்பிட்டு விட்டு என்னையும் அழைத்துக் கொண்டு காற்று வாங்க கிளம்பிவிடுவார்.

பத்மா: அவருக்கு ஆபீஸில் சுலபமான வேலைபோலிருக்கு.

ஸீதா: அப்படியில்லையடி. அவரே சொல்கிறாரே, அவருக்கு ஒரு கப் நல்ல 'டீ' சாப்பிட்டுவிட்டால் களைப்பு நீங்கி சுறுசுறுப்பு வந்துவிடுகிறதாம். நீயும்தான் உன் அகத்துக்காரருக்கு நல்லதா 'டீ' கொடுத்துப்பாரேன்.

டீ

'டீ' என்றால் என்ன? அதுதான் சிக்கனமானதும், களைப்படைந்த உடம்புக்கு ஊக்கத்தையும், தளர்ந்த மனதிற்கு உற்சாகத்தையும் மீட்டுக் கொடுக்க ஒப்பற்றதும், சுலபமாக தயாரிக்கக்கூடியதும், எங்கும் கிடைப்பதுமான தேசியபானம். ஒரு கோப்பை 'டீ' சாப்பிட்டுப்பாருங்கள் அப்பொழுதே அதன் குண விசேஷங்களை உணர்வீர்கள்.

CTB 37

'ஸெண்ட்ரல் டீ போர்டா'ரால் வெளியிடப்பட்டது.

# இயற்கையின் முறையிலேயே உங்கள் ஜீவ சக்தியைப் பெறுங்கள்!

நாள் முழுவதும் வேலை செய்து முடிவில் ஓய்ந்தும், உற்சாகமின்மையும் அலுப்பும் அடைகிறீர்களா? சரியான ஆகாரமின்மையே அதற்குக் காரணமாயிருக்கலாம், உங்களது உணவில் முக்கியமான கொழுப்புச் சத்துக்களும் மற்ற ஜீவ சத்துக்களும் குறைவாயிருந்தால் உங்களுக்கு உண்மையான தேகாரோக்யம் இன்னதென்பது தெரியவராது.



அதிகமாகவே அரிசியும் கோதுமையும் உண்பதுமாத்திரம் ஆரோக்கியத்தையும், சக்தியையும் தராது; ஒரு பூரண ஆகாரத்தில் தேவையான கொழுப்புச் சத்துக்களும், விடமின்களும் அவசியம். சுத்தமான காட்லிவர் ஆயிலில் இத்தகைய வியாதிகளை எதிர்ப்பதும், சக்தி தருவதுமான சத்துக்கள் நிறைந்திருக்கின்றன.



"ஸெவன்ஸீஸ்" என்பது பரிசுத்தத் தன்மையிலுள்ள ஒரு காட்லிவர் ஆயில் (மீன் எண்ணெ). போஜனத்திற்கு முன்னர் ஒரு டீஸ்பூன் உட்கொள்வதால் சாதாரண உணவில் குறைவாயுள்ள இயற்கையான கொழுப்புச் சத்துக்களும், ஜீவ சத்துக்களும் இதில் சேருகின்றன; அதாவது சக்தி தரும் கொழுப்புச் சத்துக்கள்; வியாதியை எதிர்க்கும் ஜீவ சத்துக்கள்.

இன்றே "ஸெவன்ஸீஸ்" வாங்குங்கள். தினந்தோறும் உட்கொள்ளுங்கள்— உங்கள் குடும்பத்தினரையும் உட்கொள்ளுமாறு தூண்டுங்கள்.

8 அல்லது 16 அவுன்ஸ் கொண்ட தட்டையான அல்லது உருண்டையான சீசாக்களில் உங்கள் வாடிக்கையான கடைக்காரர்களிடம் கிடைக்கும். 25 அல்லது 50 கொண்ட பாக்கெட்களிலும் கிடைக்கும்.




# SevenSeaS

## PURE COD LIVER OIL

பிரிட்டிஷ் காட்லிவர் ஆயில்ஸ் (ஹல் க்ரிம்ஸ்பி) லிட்.
ஹல், இங்கிலாந்து
அவர்களாலேயே தயாரித்துப் பாட்டில்களில் அடக்கம் செய்யப்பட்டது
விக்ரேதாக்கள்:
கார் & கம்பெனி, லிட்., பம்பாய், கல்கத்தா, மதராஸ்

# அஜீர்ணத்தின் வேதனையா?

## இவ்விதம் தீர்த்துக் கொள்ளவும்...





சாப்பிட்ட பின் அஜீர்ணத்தால் வருந்தவேண்டிவரும் என்று வசீகரமான ருசியுள்ள ஆகாரத்தை சாப்பிட பயப்படுகிறீரா? அப்படியானால், நிச்சயமும் நம்பிக்கையுள்ளதுவும் கட்டாயம் பயன்தரும் சுலப வழி இதோ இருக்கிறது. சாப்பிட்டவுடன் ஒருதேக்கரண்டி அளவு பிஸ்மாக் (4 அல்லது 5 மாத்திரை) கை கொஞ்சம் ஜலத்துடன் எடுத்துக் கொள்ளவும்.

பிஸ்மாக்கிலுள்ள மருந்து உடனே வேலைசெய்ய தொடங்கி வயிற்றிலுள்ள அதிக புளிப்பை சமனப்படுத்தி மிருதுவான குடல் ஓரங்களை சாந்தப்படுத்தி சாப்பாடு கெடாமல் பாதுகாக்கிறது. சில நாட்கள் ஒவ்வொரு சாப்பாட்டிற்கு பிறகு பிஸ்மாக்-மருந்து அளவை திரும்பத் திரும்ப சாப்பிட்டால், அதன் குணப்படுத்தும் வேலையை தொடர்ந்து செய்யும்.




மாத்திரைகளாகவும் பவுடராகவும் கிடைக்கும்

**'பிஸ்மாக்'**

**தக்ஷணமே அஜீர்ணத்தைப் போக்குகிறது**

**''பிஸ்மாக்'' எவ்வாறு வலியிலிருந்து குணமளிக்கிறது.**

வயிற்றுக் கோளாறுகளுக்கெல்லாம் முக்கிய காரணமான, வயிற்றிலுள்ள அதிகப்படியான புளிப்பை முறித்துப்பயனற்றதாகச் செய்கிறது. ''பிஸ்மாக்'' புளிப்பை முறிக்கும் பொருள் அதிதுரிதமாக வலியைக் குறைத்தவுடன் மற்றப் பொருள்கள் வேலையைத் துவக்குகின்றன. ஒன்று புளிப்பு வயிற்றிலுள் மேலும் சேருவதைத் தடுப்பது. மற்றொன்று வயிற்றின் உள்தோலின் எரிச்சலைக் குறைத்துக் குணப்படுத்துவது.

இவ்வோஷதம் தயாரிப்பவர்கள்:

**ஜியாப்ரே மானர்ஸ் & கோ., லிட்., பம்பாய்-1**

பிராஞ்சுகள்: கல்கத்தா - மதராஸ் - டில்லி

ஆசிரியர் "கல்கி"
எழுதிய

# பார்த்திபன் கனவு

•

தமிழ் நாட்டுச் சரித்திரத்தின் மகோன்னத காலத்தை அற்புதமாக விளக்குகிறது

•

**விலை ரூ. 6-8-0**

•

கிடைக்குமிடம் :

**"கல்கி" காரியாலயம்,**

கீழ்ப்பாக்கம் :: சென்னை

---



தற்போது கிடைக்கிறது
அமெரிக்கன் மாடல்
ரோல் பிலிம்
பாக்ஸ்

# காமிரா

திருஷ்டி உபகரணத்துடன் உயர்ந்த லென்ஸுகள் பொருத்தப்பட்ட, விலையில் மலிவான மேன்மையான காமிரா. புதிதாகக் கற்றுக் கொள்பவர்களும் எளிதாக உபயோகிக்கலாம். பிலிம் நெ. 120-ல் நீண்ட காலம் திருப்தி அளிக்கும் $2\frac{1}{4}" \times 3\frac{1}{4}"$ சைஸ் போட்டோக்கள் எடுக்கலாம். திருப்திக்கு உத்திரவாதம் முழு விவரங்களடங்கிய குறிப்புகளுடன் விலை ரூ. 10-8-0 பாக்கிங் தபால் செலவு ரூ. 1-8-0. தனி. தோல் கேஸ் ரூ. 3/- சரக்குகள் சொல்பமே உள்ளதால் உடனேயே தேவைக்கு எழுதவும். கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுதப்படல் வேண்டும்.

•

**BENGAL CAMERA HOUSE**
(108) P. O. 21. ALIGARH U. P.

---

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

**குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டி வியாதிகளுக்கு**

எங்கள் டாக்டர் கீழ்க்கண்ட இடங்களுக்கு விஜயம் செய்கிறார். குறிப்பிட்ட தேதிகளில் சந்தித்து ஆலோசனை பெறலாம்.

ஆலோசனை நேரம் :
காலை 9 முதல் 11 மணி வரை ; மாலை 3 முதல் 5 மணி வரை

அந்தந்த இடங்களுக்கு நேரே விசேஷமான நேரங்கள் குறிப்பிடாவிடில் ஆலோசனை நேரம் மேற்கண்டதே.

| | | |
|---|---|---|
| காஞ்சிபுரம் | 29—1—51 | டாக்டர் டி. கே. நடேசன், சாலை தெரு. |
| வேலூர் | 30—1—51 | மெஸர்ஸ். வி. பி சிவம் & கோ, லாங் பஜார் |
| திண்டுக்கல் | 1—2—51 | மெஸர்ஸ் சி. ஆறுமுகம் பிள்ளை. மெயின் ரோடு. சித்ரா ஸ்டோர்ஸ் |
| மதுரை | 2—2—51<br>3—2—51 | மெஸர்ஸ் டி. என். நாகலிங்கம் பிள்ளை & ஸன்ஸ் வடக்கு சித்திரை வீதி |
| சிவகங்கை (காலை 9 முதல் 12 வரை) | 5—2—51 | மெஸர்ஸ் கேஸரி & கோ. கெமிஸ்ட்ஸ் & ஜெனரல் மெர்ச்சன்ட்ஸ் |
| தேவகோட்டை (காலை 9 முதல் 12 வரை) | 6—2—51 | ஸ்ரீ மீனாக்ஷி ஸ்டோர், கெமிஸ்ட்ஸ் & ஜெனரல் மெர்ச்சன்ட்ஸ் |
| காரைக்குடி | 7—2—51 | மெஸர்ஸ் ஏ. வி. & ஸன்ஸ் டிராவலர்ஸ் விடுதி |

○●○

## ஜம்மி வெங்கடரமணய்யா & ஸன்ஸ்

மதராஸ் : திருச்சிராப்பள்ளி : கும்பகோணம்

# இந்த 3 பாயிண்டு சேமிப்பு திட்டத்தை உங்கள் பாதுகாப்பு சாஸனமாகச் செய்து கொள்ளுங்கள்

**1** உங்கள் சொந்த நலனுக்காகவே சொல்லுகிறோம். உங்களது தற்போதைய தேவைகளுக்காக எவ்வளவு செலவழிக்க நேரிட்டாலும் எதிர்பாராத விதமாக ஏற்படும் செலவுகளுக்கென்று ஏதாவது கொஞ்சம் ஒதுக்கி வைக்கவே நீங்கள் விரும்புவீர்கள். தபால் ஆபீஸ் ஸேவிங்ஸ் பாங்கி சிக்கனத்தை ஆதரிக்கிறது. உங்களது சிறு சேமிப்புகளைப் போட்டு வைக்க தகுதி வாய்ந்த வசதிகளைச் செய்து கொடுக்கிறது. ரூ. 200-க்கு மேல் பாங்கியில் இருந்தால் வருமான வரியின்றி வருஷத்திற்கு 2% வீதம் வட்டியும் தருகிறது. உங்கள் டிபாஸிட் பணத்திலிருந்து அவசரத்துக்கு உடனுக்குடன் பணம் பெறுவதற்கு முடியும். அத்துடன் பாதுகாப்புக்கு உத்தரவாதம்.

**2** உங்கள் சொந்த நலனுக்காகவே சொல்லுகிறோம். வருங்காலத்திற்காகப் போதுமான ஏற்பாடுகளை நீங்கள் செய்து கொள்ள விரும்புவீர்கள். நாஷனல் ஸேவிங்ஸ் சர்டிபிகேட்டுகளில் முதலீடு செய்து வையுங்கள். இன்று பிரசித்தமாயுள்ள சேமிப்பு முறை அது தான். ஏனெனில் இவை சர்க்கார் உத்தரவாதம் பெற்றவை. உயர்ந்த விகித வட்டியை தருபவை. மேலும் அவற்றின் மூலம் கிடைக்கும் வட்டிப் பணத்திற்கு வருமான வரி கிடையாது என்பது மட்டுமின்றி, மொத்தமாகக் கிடைக்கும் வருமானமும் வரி விலக்கப் பெற்றது. இன்று ரூ. 100 போட்டு வைத்தால் 12 வருஷத்தில் அது ரூ. 150 ஆகும். 5, 7, வருஷ சர்டிபிகேட்டுகளும் முறையே 3%, 3½% க்குச் சற்றுக் கூடுதலாகவும் கிடைக்கும். இந்த சர்டிபிகேட்டுகளை காலாவதியாவதற்கு முன் தேவை ஏற்பட்டால் மாற்றிப் பணமாக்கிக் கொள்ளலாம். அவை வாங்குவதற்குச் சுலபமானவை; வைத்திருப்பதற்குப் பத்திரமானவை.

**3** உங்கள் சொந்த நலனுக்காகவே சொல்லுகிறோம். பொதுவாக நாட்டின் சுபிட்சத்தை அதிகரிப்பதற்காக நீங்கள் தேசிய முயற்சிக்கு உதவி செய்ய விரும்புவீர்கள். உங்களுடைய பெரிய சேமிப்புகளை தேசிய முன்னேற்ற திட்டங்களைப் பூர்த்தி செய்வதற்காகப் போட்டு வையுங்கள். பொது நலத் திட்டக்காரர்களுக்கு, அவ்வப்போது கோரப்படும் சர்க்கார் கடன் பத்திரங்களில் கணிசமான பணம் போடுவதைவிடச் சிறந்த முதலீடு வேறு எதுவும் கிடையாது.

**சாத்தியமானதை எல்லாம்**

**சேமியுங்கள்**

**புத்திசாலித்தனமாக**

**முதலீடு செய்யுங்கள்**

**நேஷனல் ஸேவிங்ஸ் கமிஷனர் அறிக்கை**

**இந்திய சர்க்கார், நிதி மந்திரி காரியாலயம்**

A. C. 226

# பொருள் அடக்கம்

கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

மலர் 10 இதழ் 26 | 1951 ஜனவரி 28 | விக்ருதி ஆ தை மீ 15உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




குடியரசு தினத்தன்று

# ராமபாணம்

கிண்டலும் பரிகாசமும் பேசி
நாட்டுக்கு நல்லது செய்ய
மாதம் இருமுறைப்
பத்திரிகையாக
வெளி வருகிறது

●

ஆசிரியர்

**கே. ஸ்ரீ.**

●

**பிரதி விலை அணா 2**

**வருஷ சந்தா ரூ. 3**

**தமிழகம் எங்கும் கிடைக்கும்**

●

**ராமபாணம்**

74, லாயிட்ஸ் ரோடு

சென்னை - 14



## அழைப்பு

# புதுக்கோட்டை
# பேப்பர் மில்ஸ் லிட்.

**உமையாள்புரம், ராயவரம் போஸ்டு**

**திருமயம் (ரயில்வே ஸ்டேஷன்)**

★

மானேஜிங் ஏஜண்டுகள் :

**மெஸர்ஸ். பெரியணன் & கோ., லிட்.**

★

**28-1-51 ஞாயிறு மாலை 2 மணிக்கு**

எமது பாக்டரியை

செட்டிநாடு ராஜா ஸர்.

**M. A. முத்தையா செட்டியார்**

அவர்கள் திறந்து வைப்பார்கள்

ரஸிகமணி

**ஸ்ரீ T. K. சிதம்பரநாத முதலியார்**

அவர்கள் அக்ராசனம் வகிப்பார்கள்

★

குறுகிய காலத்தின் காரணத்தால் கம்பெனியின் அபிமானிகளும் பங்குதாரர்களும் இதையே அழைப்பாகக் கொண்டு திறப்பு விழா வைபவத்திற்கு வந்திருந்து சிறப்பிக்கக் கோருகிறோம்

★

**டைரக்டர்கள் & மானேஜிங் ஏஜண்டுகள்**

**புதுக்கோட்டை பேப்பர் மில்ஸ் லிமிடெட்**

கல்கி

# யாம் பெற்ற பாக்கியம்

சில நாளைக்கு முன்பு அமெரிக்கா தேசத்திலிருந்து ஒரு செய்தி வந்தது. இந்த வருஷத்தில் அமெரிக்காவில் யுத்த ஆயத்த தளவாடச் செலவுகளுக்காக 30,000 கோடி ரூபாய் திட்டமிட்டிருப்பதாக அறிந்தோம்! இம்மாதிரியே உலகத்திலுள்ள பல நாடுகள் அளவில்லாத பணம் யுத்த தளவாட சைன்யச் செலவுகளுக்காகத் திட்டமிட்டிருக்கின்றன.

ஏழை இந்தியா தேசத்தில் நாம் நூற்றி எழுபது கோடி ரூபாய்தான் ராணுவச் செலவு செய்கிறோம். இதிலும் கொஞ்சம் குறைப்பதற்கு இந்திய சர்க்கார் திட்டமிட்டிருக்கின்றனர்!

அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், ருஷியா, சீனா முதலிய நாடுகளின் தரைப்படை, கடற்படை, ஆகாசப் படைகளுடன் இந்தியாவின் படைகளை ஒப்பிட்டுப் பார்த்தால், நம்முடைய படை பலம் மிகக் குறைவாகவே தோன்றும்.

அமெரிக்காவும் இங்கிலாந்தும் ருஷியாவும் நூற்றுக் கணக்கில் யுத்தக் கப்பல்கள் படைத்திருக்கின்றன.

இந்தியாவின் கப்பல் படையிலோ ஒரே ஒரு குரூஸர் கப்பல்தான்!

இன்னும் ஒரு அதிகப்படி யுத்தக் கப்பல் வாங்குவது பற்றி யோசித்தால், அதற்காக ஏற்படக் கூடிய பணச் செலவை எண்ணி நம்முடைய மூச்சே நின்று போய் விடலாம்.

இப்படியெல்லாம் மிருக பலத்தில், ஆயுத பலத்தில், இந்தியா மிக மிகக் குறைந்திருந்த போதிலும் அகில உலக விவகாரங்களில் இந்தியாவின் மதிப்பு எப்படி உயர்ந்து நிற்கிறது என்று சிறிது யோசித்துப் பாருங்கள்!

அமெரிக்காவும் பிரிட்டனும் ருஷியாவும் பிரான்சும் சைனாவும் ஜப்பானும் சர்வ தேசிய சிக்கல்களை எடுப்பதற்கு இந்தியா தேசத்தை இன்று எதிர்நோக்கி நிற்கின்றன என்றால், இந்த அதிசயத்தைப் பற்றி என்ன சொல்லுவது?

உலக சரித்திரத்தில் இந்த மாதிரி அற்புதம் வேறு எப்போதாவது கேள்விப் பட்டிருக்கிறோமா? ஆயுத பலம் படைத்திராத தேசம் அகில உலகத்தின் முன்னால் இவ்வளவு மதிப்பை எப்போதேனும் அடைந்திருந்ததுண்டா?

இவ்வளவு மதிப்பும் மரியாதையும் இந்தியா தேசத்துக்கு எப்படிக் கிடைத்தது? எல்லாம், காந்தி மகான் என்ற புண்ணிய புருஷர் ஒருவர் இந்த ஏழை இந்தியா தேசத்தில் பிறவி எடுத்த காரணத்தினால்தான்!

* * * *

நமக்கு ஏதாவது கஷ்டம் நேர்ந்து விட்டால், கடவுளை நொந்து கொள்கிறோம். நம்மைச் சுற்றியுள்ள பந்துக்கள் — சிநேகிதர்களை நொந்து கொள்கிறோம். நம்முடன் சம்பந்தமில்லாத அயலார்களையும் அக்கம் பக்கமுள்ளவர்களையும் நோகிறோம். உலகத்தையே நிந்திக்கிறோம்.

ஆனால் நம்முடைய கஷ்டங்கள் நீங்கும்போது, பாக்கியம் வரும்போது, மற்றவர்களை நினைப்பதில்லை; கடவுளைக்கூடக் கருதுவதில்லை. நல்லதெல்லாம் நம்முடைய அபார வீரதீர சாமர்த்தியங்களினாலும் தகுதியினாலும் கிட்டியிருப்பதாகவே எண்ணி ஏமாறுகிறோம்.

* * * *

இயற்கை வளமும் செல்வச் சிறப்பும் பூர்வீகப் பெருமையும் வாய்ந்த நாடுகள் உலகில் எவ்வளவோ இருக்க, காந்திமகான் நம்முடைய நாட்டில் வந்து பிறந்தது இந்தப் புண்ணிய பாரத பூமி செய்த பாக்கியம்; நாம் செய்த பாக்கியம்; நம் முன்னோர்கள் செய்த தவத்தின் பலன்.

மகாத்மா இம் மண்ணுலகில் வாழ்ந்தபோது இந்தியா தேசத்தின் மூலம் உலகத்துக்கே ஒரு புதிய வழியைக் காட்டத் திருவுளங் கொண்டார்; அதற்கேற்பச் சிற்சில திட்டங்களை வகுத்துக் கொடுத்தார்.

மகாத்மா புற உடம்பு தாங்கி வாழ்ந்தபோது அவரை கோடிக்கணக்கான இந்திய மக்கள் போற்றி வணங்கினார்கள்; திரளாகக் கூட்டம் கூடி அந்தப் புனித மூர்த்தியைத் தரிசித்தார்கள்; படங்கள் வைத்துப் பூஜித்தார்கள்; 'மகாத்மா காந்திக்கு ஜே!' என்று கோஷித்தார்கள்.

ஆனால் மகாத்மா சொற்படி நடந்தவர்கள், காரியம் செய்தவர்கள், அவர் கூறிய திட்டங்களை நிறைவேற்றியவர்கள் எவ்வளவு பேர் என்று கேட்டால், ஏன், நூற்றில் ஒருவர் இருக்கலாம்! அவ்வளவுதான்.

இந்நாட்டு மக்களில் நூற்றில் ஒருவர் விதம் காந்திமகான் சொற்படி நடந்ததினாலேயே பாரத தேசம் அன்னிய ஆட்சியிலிருந்து விடுதலை பெற்றது; இன்று உலகத்து வல்லரசுகளுக்குச் சரிசமான அந்தஸ்தையும் பெற்றிருக்கிறது; இந்தியா என்ன செய்கிறது என்று உலகமெல்லாம் ஆவலுடன் எதிர்பார்க்கும் நிலையை எய்தியிருக்கிறது.

நூற்றுக்கு நூறு பேரும் காந்திமகான் சொற்படி கேட்டிருந்தால் இந்தியா தேசம் எவ்வளவு மகோந்நதமான நிலைமையை அடைந்திருக்கும் என்பதை எண்ணிப் பார்க்கும்போதே நமக்குத் திகைப்பு உண்டாகிறது.

உலகத்து மலைகளுக்குள் இமயமலைச் சிகரம் அடைந்திருக்கும் உன்னதத்தை நாமும் அடைந்திருக்கலாம்.

* * * *

மகாத்மா காட்டிய வழியினால் சுதந்திரம் பெற்ற இந்தியாவில், உலகத்துக்கு முன்னால் உந்நத பதவியை அடைந்திருக்கும் இந்தியாவில், இன்றைக்கு நம்முடைய நிலைமை என்ன?

மகாத்மா காட்டிய வழியை எத்தனை பேர் பின்பற்றுகிறோம்? மகாத்மாவின் போதனைகளை எத்தனைபேர் நிறைவேற்றுகிறோம்?

நூற்றுக்கு ஒருவர் கூட இல்லை என்பதை வருத்தத்துடன் சொல்ல வேண்டியதாயிருக்கிறது.

"சுதந்திரம் வந்தும் சுக போகங்கள் கிட்டவில்லையே?" என்ற நினைவில் பெரும்பாலோர் மூழ்கிக் கிடக்கிறார்கள்!

மகாத்மா வாழ்ந்திருந்த போது அவருடைய போதனைகளைப் பின்பற்றிய தியாகிகளிலேயே பெரும்பாலோரும் இன்று தங்கள் தியாகத்தின் பலன்களை எப்படிப் பெறலாம் என்ற திட்டங்களில் ஈடுபட்டிருக்கிறார்கள்!

நமக்குக் கிடைத்திருக்கும் மகத்தான பாக்கியத்தை நினைப்பதில்லை. குறைகளைப் பற்றியே நினைந்து அதற்குக் காரணங்களைப் பிறர் மீது சுமத்துவதில் முனைந்திருக்கிறோம்.

பாரத தேசம் அடைந்த பாக்கியத்துக்குக் காரணபுருஷர் காந்தி மகாத்மா.

ஆனால் பாரத மக்கள் இன்று படும் சில்லறைத் தொல்லைகளுக்கெல்லாம் காரணமானவர்கள் தாமேதான்.

* * * *

உலகம் கண்டறியாத உத்தம புருஷரான மகாத்மா தம் இன்னுயிரைத் தியாகம் செய்த புண்ணிய தினம் ஜனவரி 30-ந் தேதி வருகிறது; ஹிந்து சம்பிரதாயப்படி 27-ந் தேதி அந்தப் புனித சிராத்த தினம் வருகிறது.

இந்த இரு தினங்களிலும் மகாத்மாவை உண்மையான சிரத்தையுடன் நினைவுகூர்ந்து நம் உள்ளங்களைப் புனிதப்படுத்திக் கொள்வோம். அவர் நமக்கு அருளிய போதனைகளைக் கூடியவரை கடைப்பிடிக்க உறுதி கொள்வோம்.

சத்தியத்தைக் கொள்ளுவோம்; பொய்மையைத் தள்ளுவோம்.

அன்பை வாழ்த்துவோம்; துவேஷத்தைத் துரத்துவோம்.

உணவைச் சுருக்குவோம்; விளைவைப் பெருக்குவோம்.

எளிய வாழ்க்கையை மேற்கொள்ளுவோம்; ஆடம்பர படாடோபங்களை விரட்டியடிப்போம்.

பொதுநலத்தை வளர்ப்போம்; சுயநலத்தை மறப்போம்.

உயர்வு தாழ்வு எண்ணங்களைக் கைவிடுவோம்; சமத்துவ புத்தியைக் கைக்கொள்ளுவோம்.

"காந்தி மகான் பிறந்த நாட்டில் நாமும் பிறந்தோம்" என்பதை ஒவ்வொரு கணமும் நினைவு கூர்ந்து எல்லாக் காரியங்களையும் செய்ய உறுதி கொள்ளுவோம். "வாழ்க காந்தீயம்!" என்று வாழ்த்துவோம்.



அசார ஸாகசு!
உங்கள் முயற்சி வெற்றி பெறட்டும்!
உலக மக்கள்
யுத்தப் படுகுழி

# மாற்று மருந்து!

பயங்கரமான நோயை வளரவிட்டுக் கொண்டிருக்கக் கூடாது. அதற்கு ஒரு மருந்தைக் கண்டுபிடித்துத் தீரவேண்டும்.

கொடிய விஷம் ஊடுருவிச் செல்வதைப் பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது. அதற்கு மாற்றுக் கண்டுபிடித்துத் தீரவேண்டும்.

போர் வெறியாகிற பயங்கர நோயினால் உலகம் துடித்துக் கொண்டிருக்கிறது. அந்த நோய்க்கு மருந்தைக் கண்டுபிடித்து உலகத்தின் வேதனையைத் தீர்க்கவேண்டும். அந்தக் கொடிய விஷம் உலகத்தை ஊடுருவிச்சென்று பேராபத்தை விளைவிக்காமல் தடுக்கவேண்டும். அவ்வாறு தடுப்பதற்குற்ற மாற்று மருந்தைக் கண்டு பிடித்தாகவேண்டும். அந்த நோயைத் தீர்த்து, அந்த விஷத்தை முறித்து உலகம் மீண்டும் ஆரோக்கியமாக அதாவது சமாதானத்துடன் விளங்கும்படி செய்ய வேண்டும்.

அத்தகைய மருந்தை யார் கண்டுபிடிப்பது! என்று கண்டு பிடிப்பது! எப்படிக் கண்டு பிடிப்பது!—இதையெல்லாம் பற்றி யாரும் கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை.

காமன்வெல்த் என்ற பிரிட்டிஷ் நேச மண்டல மகாநாடு சில தினங்களுக்கு முன் லண்டனில் நடந்தது அல்லவா! அந்த மகாநாட்டில் கலந்துகொண்ட ஒன்பது நாடுகளின் பிரதம மந்திரிகள் உலகப் பிரச்னைகளைப் பத்து நாட்கள் வரையில் சிரமப்பட்டு அலசி ஆராய்ந்தார்கள் அல்லவா!

அவர்கள் இப்போது ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார்கள். போர் வெறியாகிற நோயிலிருந்தும் நஞ்சிலிருந்தும் உலகத்தைக் காப்பாற்றுவதற்குற்ற அருமருந்தைக் கண்டு பிடித்திருக்கிறார்கள்!

காமன்வெல்த் மகாநாடு முடிவடைந்ததும், அதில் கலந்துகொண்ட பிரதம மந்திரிகள் ஒரு பிரகடனம் விடுத்தனர். "யுத்த நோய்க்கு மாற்று மருந்து நம்பிக்கைதான்" என்று அந்தப் பிரகடனத்தில் குறிப்பிட்டனர்.

ஒவ்வொரு தேசத்தின் நல்லெண்ணத்திலும் நம்பிக்கை வேண்டும்; மானிட வர்க்கத்தின் உயர்வில், நாகரிகத்தில் நம்பிக்கை வேண்டும்; உலக சமாதானத்தில் நம்பிக்கை வேண்டும்; போரில் இறங்காமல் பரஸ்பரம் உள்ளப் பிரச்னைகளைத் தீர்க்க முடியும் என்பதில் நம்பிக்கை வேண்டும். இதுதான் அவர்கள் விடுத்தப் பிரகடனத்தின் கருத்து.

* * *

பண்டித ஜவாஹர்லால் நேரு காமன்வெல்த் மகாநாட்டுக்குச் சென்றிருந்தபோது பிரிட்டிஷ் வானொலி மூலம் உலகத்துக்கு ஒரு செய்தி விடுத்தார். "இன்று பல நாடுகளின் தலைவர்களும் ராஜதந்திரிகளும் 'உலக சமாதானம் அவசியம்,' 'உலக சமாதானம் அவசியம்' என்று பேசுகிறார்கள். ஆனால் அவர்களுடைய பேச்சு போர் வெறி பிடித்ததாக இருக்கிறது. அவர்களுடைய தொனி சமாதானத்துக்கு நேர் முரணாக இருக்கிறது. எனவே, யுத்த பாஷையில் சமாதானத்தை நாடுவதால் யாதொரு பலனும் ஏற்படாது. சமாதானத்தைப் பற்றிச் சமாதானமான பாஷையில் பேச வேண்டும்" என்று ஜவாஹர்லால்ஜி வற்புறுத்தினார்.

இன்று அமெரிக்காவும் ஐரோப்பிய நாடுகளும் உலக சமாதானத்துக்காகவே, சர்வதேச அமைதிக்காகவே பாடுபடுவதாகக் கூறுகின்றன. ஆனால் அதே சமயத்தில் ஒவ்வொரு நாடும் யுத்த தளவாடங்களைப் பெருக்கி வருகின்றன. உலக சமாதான முயற்சியிலே முன்னணியில் நிற்கும் அமெரிக்காதான் யுத்ததளவாடங்களைப் பெருக்கும் விஷயத்திலும் உலக நாடுகளுக்கே முதல் ஸ்தானம் வகிக்கிறது!

இப்போது அமெரிக்காவிலே யுத்தகால முறைகளை அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். பதினெட்டு வயதுக்கு மேற்பட்ட சகல ஆடவர்களும் கட்டாயமாக இராணுவப் பயிற்சி பெறவேண்டும் என்ற சட்டம் அமுலுக்கு வரப்போகிறது. அமெரிக்கத் துருப்புகளின் தொகை 35 லட்சமாக உயர்த்தப்பட்டிருக்கிறது. சர்வதேசப் பாதுகாப்புச் செலவு, போர்த் தளவாடச் செலவு இவற்றைத் தவிர இராணுவச் செலவுக்காக மாத்திரம் 4,142 கோடி டாலருக்கு மேல் ஆகியிருக்கிறது! அந்தச் செலவைச் சமாளிப்பதற்காக வரிகளை உயர்த்தத் தீர்மானித்திருக்கிறார்கள். விமானங்கள், டாங்கிகள் முதலிய யுத்த தளவாடங்களை வாங்குவதற்காக இன்னும் பல கோடி டாலர் செலவழிக்கத் திட்டம் போட்டிருக்கிறார்கள்.

பிரிட்டனோவெனில், அடுத்த மூன்று வருஷங்களில் இராணுவச் செலவை 500 கோடி பவுனாக உயர்த்தத் தீர்மானித்திருக்கிறது.

பிரான்ஸ் முதலிய மற்ற ஐரோப்பிய நாடுகளும் யுத்த தளவாடங்களைப் பெருக்குவதில் முனைந்திருக்கின்றன. ஜெர்மனியும் ஜப்பானும் கூட மீண்டும் யுத்ததளவாடங்களைப் பெருக்கிக் கொள்ள வேண்டும் என்று அமெரிக்கா முதலிய நாடுகள் வற்புறுத்துகின்றன! இவ்வாறு ஒரு புறம் யுத்த தளவாடங்களை அபரிமிதமாக உற்பத்தி செய்து கொண்டே, மற்றொரு புறம் 'உலக சமாதானம்' என்று கோஷிப்பதால் பலன் ஏற்படாது என்பதையே ஜவாஹர்லால்ஜி மேலே கூறிய விதம் சுட்டிக் காட்டியிருக்கிறார்.

தவிர, சீனா சமரசத்துக்கு இணங்கி வரலாம் என்ற நிலைமை ஏற்பட்டிருக்கும் இந்தச் சமயத்தில் அமெரிக்கா சீன சர்க்கார் மீது ஐ. நா. சபையில் கண்டனத் தீர்மானம் கொண்டுவர முற்பட்டிருப்பது சிறிதும் விவேகமற்ற காரியம். உண்மையிலேயே உலக சமாதானத்தை நாடும் எந்த நாடும் மேற்படி தீர்மானத்தை அங்கீகரிக்காது என்பது திண்ணம்.

* * *

இரண்டாவது உலக மகா யுத்தத்தில் கூட கொரியாவைப் போல் வேறு எந்தத் தேசமும் இவ்வளவு துன்பத்துக்கும் நாசத்துக்கும் இலக்கானதில்லை. எனவே, இன்றே போர் நிறுத்தப் பட்டாலும்கூட கொரியா நாடு

அழிந்தது அழிந்ததுதான். வெற்றியடைந்துள்ள சீனர்கள் போரைத் தொடர்ந்து நடத்துவார்களாயின், அதனால் அவர்களுக்கு லாபம் எதுவும் ஏற்படப்போவதில்லை. எனினும் அதன் விளைவாக உண்டாகும் விபரீதங்களுக்குச் சீனா இலக்காக நேரிடலாம். ஏனெனில் போரில் இறுதியான வெற்றி தோல்வி யாருக்காயினும், கொரியா நகரங்களை அழித்த அமெரிக்க விமானங்களுக்கு அடுத்துள்ள சீன நகரங்களை அழிப்பது பெரிய காரியம் அல்ல. ஆனால் சீன விமானங்கள் ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் உள்ள அமெரிக்காவுக்குச் சென்று அங்குள்ள நகரங்களை அழிப்பது எளிதன்று. அப்படியே அழிப்பதாகவே வைத்துக் கொண்டாலும், அதன் பலனாக, அழிந்த சீன நகரங்கள் மறுபடியும் சீர்பட்டு விடப் போவதில்லை. ருஷ்யாவின் பக்க பலம் சீன நகரங்களை உய்வித்துவிட முடியாது.

தன் வெற்றியையும் மற்ற நாடுகளின் நல்லுறவையும் காப்பாற்றிக்கொள்ள இப்போது சீனாவுக்கு அரிய சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. சீனாவின் முக்கிய கோரிக்கைகளை ஐ. நா. சபை அங்கீகரிக்கலாம் என்ற நிலைமை இப்போது ஏற்பட்டிருக்கிறது. பிரிட்டன் உள்படப் பல நாடுகள் சீனாவுக்கு ஐ. நா. சபையில் ஸ்தானம் அளிக்க வேண்டும் என்றும் சீனாவுடன் சமரசப் பேச்சு வார்த்தைகளை ஆரம்பிக்க வேண்டும் என்றும் வற்புறுத்துகின்றன. இவ்வாறு சீனாவுக்குச் சாதகமாக ஏற்பட்டிருக்கும் சூழ்நிலையை சீன சர்க்கார் உணர்ந்து, சமரச யோசனைகளுக்கு இணங்குவதன் மூலம் தனது பெருமையைக் காப்பாற்றிக் கொள்ள முடியும். அதன் பயனாக உலகத்தை எதிர்நோக்கி நிற்கும் பேராபத்து தவிர்க்கப்பட்டு, உலக சமாதானம் ஏற்படுவதற்கான சூழ்நிலையும் உண்டாகும்.

# தொண்டின் சிகரம் மறைந்தது

சுதந்திர இயக்கத்தின் முன்னணியில் நின்று அதை நடத்தி வந்த தலைவர்கள், தேசம் உய்வதற்காகப் பல கஷ்ட நஷ்டங்களையும் துன்பங்களையும் அனுபவித்தத் தியாக சீலர்கள் மக்களின் தனி மதிப்புக்கு உரியவர்களாக இருக்கிறார்கள். அவர்களைச் சரித்திரம் என்றென்றும் போற்றிப்பாராட்டிவரும். அவர்களுக்குத் தேசமக்கள் என்றென்றும் அஞ்சலிசெய்து வருவார்கள்.

ஆனால் சுதந்திரப் போரில் நேரடியாகக் கலந்து கொள்ளாமலும் சிறை சென்று கஷ்டப் படாமலும் ஒருவர் தியாகத்தின் சிகரமாக விளங்கினார் என்றால், தேச மக்களின் நன்மதிப்புக்குப் பாத்திரர் ஆனால் என்றால், அது ஆச்சரியப்படத் தக்க விஷயம் அல்லவா! அந்தப் பெருமையும் பாக்கியமும் தக்கர் பாபா என்ற அமிருதலால் வித்தல்தாஸ் தக்கருக்கே கிடைத்தது!



தக்கர் பாபா ஜனங்களின் நன்மதிப்பை மாத்திரமல்ல, மகாத்மா காந்தி உள்பட அரும் பெரும் தலைவர்களின் நன்மதிப்பையும் பெற்று விளங்கினார்.

பம்பாய் கார்ப்பொரேஷனில் சாதாரண இஞ்ஜினீயராக இருந்த தக்கர் பாபா அந்த உத்தியோகத்தை உதறித் தள்ளிவிட்டுத் தியாகத் தீயில் குதித்தார். தமது வாழ்க்கை முழுவதையும் ஹரிஜனத் திருப் பணிக்காக அர்ப்பணம் செய்தார். கோபாலகிருஷ்ண கோகலே ஸ்தாபித்த இந்திய ஊழியர் சங்கத்தின் உப தலைவராக இருந்த தக்கர் பாபாவை காந்தி மகான் ஹரிஜனத் திருப்பணிக்காகத் தேர்ந்தெடுத்தார் எனில், பாபாவின் பெருமைக்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்!

தேசியக் காங்கிரஸின் திட்டத்தில் ஹரிஜன சேவை முக்கிய ஸ்தானம் வகிக்கிறது. ஹரிஜன இயக்கம் இன்று இவ்வளவு தூரம் வெற்றி பெற்றிருப்பதற்குத் தக்கர் பாபாவின் தலை சிறந்த தொண்டு முக்கிய காரணம் என்று கூறுவது பிழையாகாது. ஹரிஜனங்களின் முன்னேற்றத்திற்காக அவர் புரிந்த ஊழியத்தையும், காட்டுமிராண்டிகளாக இருந்த மலைவாசிகளை நாகரிக மக்களாகச் செய்வதற்காக அவர் பட்டபாடுகளையும் பாரத நாடு என்றென்றும் மறக்க முடியாது. அவரது தொண்டின் சிறப்பைப் பாராட்டியே, 1949-ம் ஆண்டில் அவரது 80-வது ஜெயந்தி வைபவத்தின்போது தேசத்தின் சார்பில் தலைவர்கள் வாழ்த்துச் செய்திகள் அடங்கிய தக்கர் பாபா ஞாபகார்த்த மலரை வெளியிட்டார்கள்.

அரை நூற்றாண்டு வரையில் அரிய பணி புரிந்து தமது வாழ்க்கையைப் பரிபூரணமாகச் செய்த தக்கர் பாபா, சென்ற 19-ந்தேதி தம்முடைய 82-வது வயதில் பூத உடலை நீத்துப் புகழ் உடம்பு எய்திய செய்தி கேட்டுத் தேசம் முழுவதும் துக்கத்தில் ஆழ்ந்தது. தொண்டின் சிகரமாக விளங்கிய அந்த உதாரண புருஷரின் ஆத்மா சாந்தியடையுமாக!

# உபயகுசலோபரி

இந்த ஆண்டில் தென்னிந்திய மக்கள் குடியரசுத் திருவிழாவையும் ஸ்ரீ தியாகப் பிரம்ம சங்கீத மஹோத்சவத்தையும் சேர்த்துக் கொண்டாடுகிறார்கள்.

தென்னிந்தியர்களாகிய நாம் சங்கீதப் பிரியர்கள். "நூற்றுக்கு 25 விதம் ரேஷனைக் குறைத்து விட்டார்களே!" என்பதைக் கூட ராகத்திலும் தாளத்திலும் அமைத்துப் பல்லவி, அநுபல்லவி, சரணம், ஸ்வரப் பிரஸ்தாரம் ஆகிய வைபவங்களுடன் பாடிக் கொண்டாடுவோம்! அப்படி யிருக்கும்போது, மற்ற சில்லறைத் தொல்லைகளை மனதில் வைத்துக் கொண்டு சங்கீத விழாவையோ, குடியரசுத் திருநாளையோ கொண்டாடாமல் விடுவோமா!

ஸ்ரீ தியாகராஜருக்கும் சுதந்திரக் குடியரசுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஸ்ரீ தியாகராஜர் சுதந்திர புருஷர். "அரசருக்கும் அடிமையாக மாட்டேன்; அவர் தரும் பணத்துக்கும் அடிமையாக மாட்டேன்!" என்று கூறிய தீரர். "இராம பக்தி என்கிற சாம்ராஜ்யமே சாம்ராஜ்யம்! மற்ற எந்த சாம்ராஜ்யமும் அதற்கு இணையாகுமோ!" என்ற உறுதி கொண்ட மகான். குடியரசுக் கொண்டாட்ட நாளிலேயே ஸ்ரீ தியாகராஜ உற்சவமும் இவ்வாண்டு நடை பெறுவதை முன்னிட்டுக் "கல்கி" குடியரசு மலர் ஸ்ரீ தியாகராஜரின் சரித்திரத்தை அழகிய வர்ண சித்திரக் காட்சிகளாகத் தாங்கிக்கொண்டு வருகிறது.

இராம பக்தி சாம்ராஜ்யத்துக்கு அடுத்தபடியாக நாம் போற்றிக் கொண்டாட வேண்டியது நமது பழம் பெரும் பாரத நாட்டின் சாம்ராஜ்யமாகும். சகுந்தலை பெற்ற பிள்ளையாகிய பரத சக்ரவர்த்தி பாரத சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தது முதல் இந்திய தேசத்தில் புகழ் பெற்று விளங்கிய பல்வேறு சாம்ராஜ்யக் காட்சிகளைக் "கல்கி" குடியரசு மலரில் மற்றொரு சித்திர அநுபந்தமாக வெளியிட்டிருக்கிறோம். ராஜேந்திரரும் நேருவும் ராஜாஜியும் இன்று நடத்தும் குடியரசு சாம்ராஜ்யத்தில் வந்து மேற்கூறிய சித்திர சரித்திர வரலாறு முடிவடைகிறது.

இன்னும் "கல்கி" குடியரசு மலரில் குமாரி ஸ்ரீமதியின் கலைச் சிறப்புவாய்ந்த இரண்டு மூவர்ணச் சித்திரங்கள் திகழ்கின்றன. இராஜராஜ சோழனை எதிர்பார்த்து வானதி தன்னைச் சிங்காரித்துக் கொள்ளும் அழகிய மூவர்ணப் படத்தை 'மணியம்' கண்கவரும் வனப்புடன் தீட்டி யிருக்கிறார். புள்ளி மானின் கண்கள் தன்நாயகியின் கண்களை நினைவூட்டியபடியால் அம்புவிடாமல் தயங்கி நிற்கும் வீரனின் காட்சியைச் சரவணன் ஓவியமாக்கியிருக்கிறார்.



ஸ்ரீ தியாகப் பிரம்மம்

சாஸ்திரியின் வர்ணக் 'கார்ட்டூன்'கள் இந்த வருஷக் குடியரசு மலரில் விசேஷ அம்சமாகப் பொலிகின்றன. நம்முடைய தலைவர்களுக்கு அவர் அளித்திருக்கும் மாறு வேடங்கள் பொருத்தந்தானா என்பதை நேயர்களே பார்த்துக் கொள்ளலாம்.

நம் தலைவர் ராஜாஜி அவர்கள் "சாட்சி கோபாலன்" என்னும் பக்திச் சுடர் வீசும் கதையை எழுதி யுள்ளார்கள். ரஸிகமணி அவர்கள் இராம ராஜ்யத்தைத் தேரின்மீது ஏற்றிக் கொண்டு வருகிறார்கள். தமிழ் நாட்டு வீர தேசபக்த மணிகளாகிய ஸ்ரீ சத்தியமூர்த்தி, ஸ்ரீ முத்துரங்க முதலியார் ஆகியவர்களின் வாழ்க்கையில் சில சிறப்பான அம்சங்களைக் குறித்து ஸ்ரீ ம. பொ. சிவஞான கிராமணியார் அவர்களும், கனம் பக்தவத்ஸலம் அவர்களும் எழுதி உதவி யிருக்கிறார்கள். ஆஸ்தான கவி நாமக்கல் கவிஞர் சிறுகதைத் துறையில் முதன் முதலில் பிரவேசித்து அழகொழுக எழுதியுள்ள 'சுதந்திரக் கல்யாணம்' என்னும் சிறுகதை நம் 'குடியரசு' மலருக்குச் சிறந்த அலங்காரமாக அமைந்துள்ளது. இன்னும் அநேக கதைகளும் நகைச் சுவைக் கட்டுரைகளும் பிரித்த பக்கமெல்லாம் அழகிய சித்திரங்களுமாக இந்த வருஷத்துக் 'கல்கி' குடியரசு மலர் திகழ்கிறது.

சில வருஷ காலமாக ஜவுளி, சர்க்கரை முதலிய சில சாமான்களுக்குத் திடீர் திடீர் என்று பஞ்சம் நேர்வதும், விலை ஒட்டிக்கு இரட்டியாவதும் நேயர்கள் அறிந்திருக்கிறார்கள். இவற்றைக் காட்டிலும் 'குட்டிச்சாத்தான்' விளையாட்டில் கைதேர்ந்து விளங்குவது 'நியூஸ் பிரிண்ட்' என்னும் பத்திரிகை அச்சடிக்கும் காகிதம். சில காலம் பத்திரிகைக் காகிதத்தின் பஞ்சம் தீர்ந்து விட்டதுபோல் தோன்றுகிறது. பத்திரிகைகள் பக்கங்களை அதிகம் செய்கின்றன. உடனே எப்படியோ காகித மார்க்கெட்டில் பெரும் பஞ்சம் ஏற்பட்டு விடுகிறது. காகிதத்தின் விலை இரண்டு மடங்கு, மூன்று மடங்கு என்று ஏறி விடுகிறது. அந்த விலைக்கும் கிடைப்பது அரிதாகி விடுகிறது. பத்திரிகைகள் மறுபடியும் பக்கத்தைக் குறைத்து விலையை ஏற்ற வேண்டி வருகிறது.

என்ன இடையூறுகள் நேர்ந்தாலும் "கல்கி" வாசகர்களுக்கு முன்னம் அறிவித்தபடி "குடியரசு" மலர் வெளியிட்டுக் குடியரசு விழாக் கொண்டாடுவது என்று உறுதிகொண்டு நிறைவேற்றினோம். நம் நேயர்களுக்குக் "கல்கி" குடியரசு மலர் சிறந்த விருந்தா யிருக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.



ராவ்சாகிபு உயர்திரு வி. வி. ஸி. வி. நடேச முதலியார் 6-4-1899-ல் சேலம் ஜில்லா திருச்செங்கோட்டில் செங்குந்த குலத்தில் புள்ளிக்காரர் குடும்பத்தில் உயர்திரு வி. வி. ஸி. விஸ்வநாத முதலியாரின் மூத்த குமாரராகப் பிறந்தார். ஈரோடு லண்டன் மிஷன் உயர்தர பாடசாலையில் கல்வி பயின்று தந்தையாரின் மறைவு காரணமாக மேல் படிப்பை நிறுத்தி வர்த்தகத் துறையில் ஈடுபட்டார். நாணயமும், அறிவும், திறமையும் இருந்த காரணத்தால் வாணிபத்தில் நன்மதிப்பும் பெரும் பொருளும் ஈட்டினர். பொருளை வளர்த்தல் அருளை வளர்க்கவே என்னும் கருத்தை ஏற்று, மருத்துவ உதவிக்கும், கல்விக்கும், ஏழைகளின் வாழ்விற்கும் தாராளமாகச் செல்வத்தைக் கொடுத்து உதவியதால் அரசாங்கத்தார் அவருக்கு ராவ்சாகிபு என்ற கௌரவப் பட்டத்தை 1935 ஆண்டில் வழங்கினர்கள்.

● தம் வாழ்க்கையில் பல துறைகளில் பொதுநலத் தொண்டு புரிவதில் ஈடுபட்டிருந்தார். ஜில்லா போர்டு அங்கத்தினராகவும், தாலூகா போர்டு தலைவராகவும், பதினேரு ஆண்டுகள் பெஞ்சி கோர்ட்டு பிரசிடெண்டாகவும் பணியாற்றி வந்தார். 52 வயது நிரம்பிய உயர்திரு முதலியார் அவர்கள் இந்த மாதம் முதல் தேதி யன்று சேலத்திலுள்ள தமது இல்லத்திலேயே இறைவன் திருவடி நிழலை அடைந்தார். திரு முதலியாரின் பிரிவால் வாடும் அவரது புதல்விகளுக்கும் ஒரே புதல்வரான திரு டி. வி. என். விஸ்வநாதன் அவர்களுக்கும் அவரது உறவினர்களுக்கும் நண்பர்களுக்கும் மனமார்ந்த அனுதாபத்தை தெரிவித்துக் கொள்கிறோம்.

# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 29

## “நம் விருந்தாளி”

**பு**லவர்கள் சென்ற பிறகு அரண்மனை மருத்துவர் சக்கரவர்த்திக்கு மருந்து கலந்து கொண்டு வந்தார். மலையமான் மகளான பட்டத்தரசி அதைத் தன் திருக்கரத்தால் வாங்கிக் கணவருக்குக் கொடுத்தாள்.

அது வரை பொறுமையாய்க் காத்திருந்த சின்னப் பழுவேட்டரையர், வந்தியத் தேவனை பிடித்தபிடி விடாமல் இழுத்துக் கொண்டே சக்கரவர்த்தியின் அருகில் போய்ச் சேர்ந்தார்.

“பிரபு! புது மருந்தினால் ஏதாவது பலன் தெரிகிறதா?” என்று கேட்டார்.

“பலன் தெரிகிறதாக மருத்துவர் சொல்லுகிறார்; தேவியும் சொல்கிறார். ஆனால் எனக்கென்னவோ, நம்பிக்கை உண்டாகவில்லை. உண்மையைச் சொன்னால், தளபதி! இதெல்லாம் வீண் முயற்சி என்றே தோன்றுகிறது. என் விதி என்னை அழைக்கிறது. யமன் என்னைத் தேடிக் கொண்டு பழையாறைக்குப் போயிருக்கிறான் என்றே நினைக்கிறேன். அங்கே நான் இல்லை யென்று அறிந்ததும், இவ்விடம் என்னைத் தேடிக் கொண்டு வந்து சேருவான்!......”

“பிரபு! தாங்கள் இப்படி மனமுடைந்து பேசக் கூடாது. எங்களையெல்லாம் இப்படி மனங் கலங்கச் செய்யக் கூடாது. தங்கள் குல முன்னோர்கள்......”

“ஆ! என் குல முன்னோர்கள் யமனைக் கண்டு அஞ்சியதில்லை யென்று சொல்லுகிறீர்! எனக்கும் என் குல முன்னோர்கள் பலரைப் போல் போர்க்களத்தில் முன்னணியில் நின்று போர் செய்து உயிர் விடும் பாக்கியம் கிடைக்குமானால், அத்தகைய மரணத்துக்குச் சிறிதும் அஞ்ச மாட்டேன். சோர்வும் கொள்ள மாட்டேன். உற்சாகத்துடன் வரவேற்பேன். என்னுடைய பெரிய தகப்பனார் இராஜாதித்தியர் தக்கோலத்தில் யானைமேலிருந்து போர் புரிந்தபடியே உயிர் நீத்தார். சோழ குலத்தின் வீரப் புகழைத் தக்கோலம் போர்க்களத்தில் என்றென்றும் நிலை நாட்டினார். ‘யானைமேல் துஞ்சிய தேவர்’ என்று புகழ்பெற்றார். நான் என்ன புகழைப் பெறுவேன்? ‘நோய்ப் படுக்கையில் துஞ்சிய சுந்தர சோழன்’ என்றுதானே பெயர் பெறுவேன்? என்னுடைய இன்னொரு பெரிய தகப்பனார், கண்டராதித்த தேவர் சிவபக்தியில் ஈடுபட்டு மரண பயத்தை விட்டிருந்தார். ஸ்தல யாத்திரை செய்வதற்கு மேற்குக் கடற்கரை நாடுகளுக்குப் போனார். அங்கேயே காலமானார். ‘மேற்கெழுந்தருளிய தேவர்’ என்று அவரும் பெயர் பெற்றார். அவரைப் போன்ற சிவபக்தனும் அல்ல நான்; ஸ்தல யாத்திரை செய்யவும் இயலாதவனாகி விட்டேன். இப்படியே எத்தனை நாள் படுத்திருப்பேன்? என்னைச் சேர்ந்த

கல்கி

வர்கள் எல்லாருக்கும் பாரமாக!...... ஆனால் என் மனதிற்குள் ஏதோ சொல்கிறது, அதிக காலம் நான் இந்தப் பூவுலகில் இருக்கமாட்டேன் என்று......"

"சக்கரவர்த்தி! அரண்மனை வைத்தியர் தங்களுக்கு அபாயம் ஏதும் இல்லை என்று கூறுகிறார். ஜோதிடர்களும் அபாயம் இல்லையென்றே சொல்கிறார்கள். ஆனால் இந்தச் சிறுபிள்ளை தங்களிடம் ஏதோ அபாயத்தைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தான்..."

"ஆ! இவன் காஞ்சி நகரிலிருந்து வந்த பிள்ளைதானே? ஆமாம்; ஏதோ அபாயம் என்று சொன்னான். எதைப் பற்றிச் சொன்னாய், தம்பி? என்னுடைய நிலைமையைப் பற்றியா?"

வல்லவரையனுடைய மூளை மின்னல் வேகத்தில் வேலை செய்தது. 'அபாய'த்தைப் பற்றித் தான் எச்சரித்ததாக ஒப்புக் கொண்டால் சந்தேகங்கள் ஏற்பட்டுத் தனக்கு அபாயம் நேருவது நிச்சயம். அந்த இக்கட்டிலிருந்து தப்ப வேண்டும். நல்லது; ஓர் உபாயம் செய்து பார்க்கலாம். இலக்கணத்தைத் துணையாகக் கொண்டு நெடிலைக் குறில் ஆக்கலாம்!



"சக்கரவர்த்திப் பெருமானே! அபாயத்தைப் பற்றிச் சொல்வதற்கு நான் யார்? நம் வீர தளபதி சின்னப் பழுவேட்டரையரும், அரண்மனை வைத்தியரும், சாவித்திரி அம்மனையொத்த மகாராணியும் இருக்கும் போது என்ன அபாயம் வந்துவிடும்? 'அபயம்' 'அபயம்' என்று தங்களிடம் நான் முறையிட்டுக் கொண்டேன். பழைய வாணர் குலத்துக்கு நான் ஒரு அறியாச் சிறுவன்தான் இப்போது பிரதிநிதியாக மிஞ்சியிருக்கிறேன். தங்கள் திருப் புதல்வர் மனம் மகிழும்படி சோழப் பேரரசுக்குத் தொண்டு புரிந்து வருகிறேன். எங்கள் பழைய பூர்வீக ராஜ்யத்தில் ஒரு சிறு பகுதியையாவது அடியேனுக்குத் திருப்பிக் கொடுக்க அருள் புரிய வேண்டும். அரசர்க்கரசே! அபயம்! அபயம்! இந்த அறியாச் சிறுவன் தங்கள் அபயம்!" என்று வல்லவரையன் மூச்சு விடாமல் படபடவென்று பேசி நிறுத்தினான்.

இதைக் கேட்ட பழுவேட்டரையரின் முகம் சுருங்கியது. சுந்தர சோழரின் முகம் மீண்டும் மலர்ந்தது. மகாராணியின் முகத்தில் கருணை ததும்பியது.

"இந்தப் பிள்ளை பிறந்தவுடனே சரஸ்வதி தேவி இவனுடைய நாவில் எழுதி விட்டாள் போலும்! இவனுடைய வாக்குவன்மை அதிசயமாயிருக்கிறது!" என்றாள் தேவி.

இதுதான் சமயம் என்று வந்தியத்தேவன், "தாயே! தாங்கள் எனக்காகப் பரிந்து ஒரு வார்த்தை சொல்ல வேணும். நான் தாய் தந்தையற்ற அநாதை. வேறு ஆதரவு அற்றவன். என்னுடைய வேண்டுகோளை நானே தான் வெளியிட்டாக வேண்டும். 'பக்தனுக்குப் பரிந்து பார்வதி தேவி பரமசிவனிடமும் லக்ஷ்மிதேவி மகா விஷ்ணுவிடமும் பேசுவது போல் தாங்கள் எனக்காகப் பேச வேண்டும். எங்கள் பூர்வீக அரசில் ஒரு பத்துக் கிராமத்தைத் திரும்பக் கொடுத்தாலும் போதும். நான் மிகவும் திருப்தி அடைவேன்!" என்றான்.

இதையெல்லாம் கேட்கக் கேட்கச் சுந்தர சோழருக்கு ஒரே வியப்பும் மகிழ்ச்சியுமாயிருந்தது. அவர் சின்னப் பழுவேட்டரையரைப் பார்த்து, "தளபதி! இந்த இளைஞனை எனக்கு ரொம்பவும் பிடித்திருக்கிறது. தேவியின் முகத்தைப் பார்த்தால், இவனை மூன்றாவது பிள்ளையாகச் சுவிகாரம் எடுத்துக் கொண்டு விடலாமா என்றே யோசிப்பதாகத் தெரிகிறது. இவனுடைய கோரிக்கையை நிறைவேற்றி வைக்கலாம் அல்லவா? அதில் ஒன்றும் கஷ்டம் இராதே? உமது அபிப்பிராயம் என்ன?" என்றார்.

"இதில் அடியேனுடைய அபிப்பிராயத்துக்கு இடம் என்ன இருக்கிறது? இளவரசர் கரிகாலரின் கருத்தையல்

லவோ அறியவேண்டும்?" என்றார் தஞ்சைக் கோட்டைத் தளபதி.

"சக்கரவர்த்தி! இளவரசரைக் கேட்டால், பழுவூர்த் தேவரைக் கேட்க வேண்டும் என்று சொல்லுகிறார். பழுவூர்த் தேவரோ, இளவரசரைக் கேட்க வேண்டும் என்கிறார். இரண்டு பேருக்கும் நடுவில் என் கோரிக்கை......"

"பிள்ளாய்! நீ கவலைப்படாதே! இரண்டுபேரையும் சேர்த்து வைத்துக் கொண்டே கேட்டுவிடலாம்!" என்றார் சக்கரவர்த்தி.

பிறகு சின்னப் பழுவேட்டரையரைப் பார்த்து, "தளபதி! இளவரசனிடமிருந்து இந்தப் பிள்ளை ஓலைகொண்டு வந்தான். பழையபடி, காஞ்சிக்கு நான் வரவேண்டும் என்றுதான் ஆதித்தன் ஓலையில் எழுதியிருக்கிறான். அங்கே புதிதாய் பொன் மாளிகை கட்டியிருக்கிறானாம். அதில் நான் சில நாளாவது தங்க வேண்டுமாம்!" என்றார்.

"தங்கள் சித்தம் எப்படியோ, அப்படியே செய்கிறது!" என்றார் கோட்டைத் தளபதி.

"ஆ! என்னுடைய சித்தம் எப்படியோ அப்படி நீர் நடத்துவீர். ஆனால் என் கால்கள் மறுக்கின்றன. காஞ்சிக்குப் பிரயாணம் செய்வது இயலாத காரியம். அரண்மனைப் பெண்டுகளைப் போல் பல்லக்கில் ஏறித் திரை



போட்டுக் கொண்டு யாத்திரை செய்வதென்பதை நினைத்தாலே எனக்கு அருவருப்பாயிருக்கிறது. ஆதித்த கரிகாலனை இங்கே வந்து விட்டுப் போகும்படிதான் மறு ஓலை எழுதிக் கொடுக்க வேண்டும்..."

"இளவரசர் இச்சமயம் காஞ்சியை விட்டு இங்கு வரலாமா? வட திசையில் நம் பகைவர்கள் இன்னும் பலசாலிகளாக இருக்கிறார்களே!"

"பார்த்திபேந்திரனும் மலையமானும் அங்கிருந்து பார்த்துக் கொள்வார்கள். இளவரசன் இச்சமயம் இங்கே என் பக்கத்தில் இருக்கவேண்டும் என்று என் உள்ளத்தில் ஏதோ சொல்கிறது. அது மட்டுமல்ல; ஈழநாட்டுக்குச் சென்றிருக்கும் இளங்கோவையும் உடனே இங்கு வந்து சேரும்படி அழைப்பு அனுப்ப வேண்டும். இரண்டு பேரையும் வைத்துக்கொண்டு ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றிப் பேசி முடிவு செய்ய விரும்புகிறேன். அருள்மொழி இங்கு வரும்போது, ஈழப்படைக்கு உணவு அனுப்புவது பற்றி உங்கள் ஆட்சேபத்தையும் அவனிடம் தெரிவிக்கலாம்..."

"சக்கரவர்த்தி! மன்னிக்க வேண்டும். ஈழத்துக்கு உணவு அனுப்புவதை நான் ஆட்சேபிக்கவில்லை. தனதான்யாதிகாரியும் ஆட்சேபிக்கவில்லை. சோழ நாட்டுக் குடிமக்கள் ஆட்சேபிக்கிறார்கள். சென்ற அறுவடையில் சோழநாட்டில் விளைவு குறைந்து விட்டது. நம்முடைய மக்களுக்கே போதாமலிருக்கும் போது, இலங்கைக்குக் கப்பல் கப்பலாக அரிசி அனுப்புவதை மக்கள் ஆட்சேபிக்கிறார்கள்! தற்போது வாய்க்குள் முணுமுணுக்கிறார்கள். கொஞ்ச நாள் போனால், மக்களின் கூச்சல் பலமாகும். தங்கள் உடல் நிலையைப் பாதிக்கும்படி இந்த அரண்மனைக் குள்ளேயும் அவர்களுடைய கூச்சல் வந்து கேட்கும்!........"



தக்கோலப் பெரும் போர்

"குடிமக்கள் ஆட்சேபிக்கிற காரியத்தைச் செய்ய அருள்மொழி ஒரு நாளும் விரும்ப மாட்டான். எல்லாவற்றுக்கும், அவன் ஒருதடவை இங்கு வந்து விட்டுப் போகட்டும். பெரிய பழுவேட்டரையர் வந்ததும் இலங்கைக்கு ஆள் அனுப்புவது பற்றி முடிவு செய்யலாம். அவர் எப்போது திரும்புகிறார்?"

"இன்று இரவு கட்டாயம் வந்து விடுவார்!"

"காஞ்சிக்கும் நாளைய தினம் ஓலை எழுதி அனுப்பலாம். இந்தப் பிள்ளையிடமே அந்த ஓலையையும் கொடுத்தனுப்பலாம் அல்லவா?"

"இந்தச் சிறுவன் காஞ்சியிலிருந்து ஒரே மூச்சில் வந்

திருக்கிறான். சில நாள் இவன் இங்கேயே தங்கி இளைப்பாறி விட்டுப் போகட்டும். வேறு ஆளிடம் ஓலையைக் கொடுத்து அனுப்பலாம்."

"அப்படியே செய்க. இளவரசன் வருகிறவரையிலே கூட இவன் இங்கேயே இருக்கலாம்!"

இச்சமயம் மலையமான் மகள் எழுந்து நிற்கவே, சின்னப் பழுவேட்டரையர், "இன்று அதிக நேரம் தங்களுக்குப் பேசும் சிரமம் கொடுத்து விட்டேன். மன்னிக்க வேணும். தேவி எச்சரிக்கை செய்யும் வரையில் நீண்டு விட்டது!" என்று சொன்னார்.

"தளபதி! இந்தப்பிள்ளை நம் விருந்தாளி. இவனுக்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுங்கள். சக்கரவர்த்திக்கு மட்டும் உடம்பு சரியாயிருந்தால், இவனை நமது அரண்மனையிலேயே இருக்கச் சொல்லியிருக்கலாம்!" என்றாள் மலையமான் மகள்.

"நான் கவனித்துக் கொள்கிறேன், தாயே! தங்களுக்கு அந்தக் கவலை வேண்டாம். நன்றாய்க் கவனித்துக் கொள்கிறேன்!" என்றார் சின்னப் பழுவேட்டரையர். அப்போது அவரையறியாமலே அவருடைய ஒரு கை மீசையைத் தொட்டு முறுக்கிற்று.

## அத்தியாயம் 30

# சித்திர மண்டபம்

சின்னப் பழுவேட்டரையர் வந்தியத்தேவனைத் தம்முடன் ஆஸ்தான மண்டபத்துக்கு அழைத்துப் போனார். சக்கரவர்த்தியிடம் அவன் கூறியது என்ன என்பதைப் பற்றி அவன் சொன்ன சமாதானம் அவருக்கு அவ்வளவாகப் பூரண திருப்தி அளிக்கவில்லை. சக்கரவர்த்தியைத் தனியாகப் போய்ப் பார்க்கும்படி அவனுக்கு அநுமதி அளித்தது ஒருவேளை தவறோ என்றும் தோன்றியது. ஆதித்த கரிகாலரிடமிருந்து வந்தவனாதலால், அவனைப் பற்றிச் சந்தேகிக்க வேண்டியது முறை. ஆனால் தலைவர் முத்திரை மோதிரத்துடன் அனுப்பியுள்ளபடியால் சந்தேகிக்க இடமில்லை. ஆகா! இம்மாதிரி காரியங்களில் பெரியவருக்கு வேறொருவர் ஜாக்கிரதை சொல்லித்தர வேண்டுமா, என்ன? ஆனாலும், தாம் திடீரென்று தரிசன மண்டபத்துக்குள் சென்றபொழுது அவ்வாலிபன் தயங்கி நின்று பயந்தவன் போல் விழித்தது அவர் கண்முன்னால் தோன்றியது. "அபாயம்! அபாயம்!" என்று அவன் கூவியது நன்றாகக் காதில் விழுந்ததாக ஞாபகம் வந்தது. "அபயம்" என்று சொல்லியிருந்தால், அது தம் காதில் "அபாயம்" என்று விழுந்திருக்கக் கூடியது சாத்தியமா? - எல்லாவற்றுக்கும் இவனை உடனே திருப்பி அனுப்பாமலிருப்பது நல்லது. தலைவர் வந்த பிறகு இவனைப் பற்றி நன்றாய்த் தெரிந்து கொண்டு பிறகு உசிதமானதைச் செய்யலாம். இம்மாதிரி தீரனாகிய வாலிபனை நாம் நம்முடைய அந்தரங்கக் காவற் படையில் சேர்த்துக் கொள்ளப் பார்க்க வேண்டும். சமயத்தில் உபயோகமாயிருப்பான். ஏன்? இவனுக்கு இவனுடைய முன்னோர்களின் பழைய அரசில் ஒருபகுதியை வாங்கிக் கொடுத்தாலும்




விஜயாலயன்

கொடுக்கலாம். இம்மாதிரி பிள்ளைகளுக்கு ஒரு முறை உதவி செய்து விட்டால், அப்புறம் என்றைக்கும் நமக்குக் கட்டுப்பட்டு நன்றியுடனிருப்பார்கள். ஒருவேளை, இவன் உறுதியான விரோதி என்று ஏற்பட்டு விட்டால், அதற்குத் தக்க ஏற்பாடு செய்ய வேண்டும். எதற்கும் தலைமையனுர் வந்து சேரட்டும்; பார்க்கலாம்.

ஆஸ்தான மண்டபம் சென்றதும் வந்தியத்தேவன் அப்புறமும் இப்புறமும் ஆவலுடன் பார்க்கத் தொடங்கினன். தளபதியிடம் தான் ஓலையை எடுத்துக் கொடுத்த இடத்தில் உற்று உற்று நன்றாகப் பார்த்தான். தப்பித் தவறி இன்னொரு ஓலை,—அந்த முக்கியமான ஓலை கிடக்கிறதா என்றுதான். அதைமட்டும் கண்டுபிடிக்க முடியாவிட்டால், தன்னைப் போன்ற மூடன் வேறு யாரும் இருக்க முடியாது! உலகமே புகழும் சோழ குலத்து அரசிளங் குமரியைத் தான் பார்க்க முடியாமலே போய்விடும். ஆதித்த கரிகாலர் தன்னிடம் ஒப்புவித்த பணியில் சரி பாதியைச் செய்யமுடியாமலே போய்விடும்.

சின்னப் பழுவேட்டரையர் அங்கிருந்த ஏவலாளர்களில் ஒருவனைப் பார்த்து, "இந்தப் பிள்ளையை நமது அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு போ! விருந்தாளி விடுதியில் வைத்து வேண்டிய வசதிகள் செய்து கொடுத்துப் பார்த்துக் கொள்! நான் வரும் வரையில் அங்கேயே இரு!" என்றுர்.

வந்தியத் தேவனும் ஏவலாளனும் வெளியே சென்ற உடன், இன்னொருவன் தளபதியிடம் பயபக்தியுடன் நெருங்கி, ஒரு ஓலைச்சுருளை நீட்டினன். "இங்கிருந்து தரிசன மண்டபத்துக்குப் போகும் வழியில் இது கிடந்தது. இப்போது சென்ற பையனுடைய மடியிலிருந்து விழுந்திருக்கக் கூடும்!" என்று சொன்னன்.

தளபதி அதை ஆர்வத்துடன் வாங்கிப் பிரித்துப் பார்த்தார். அவருடைய புருவங்கள் நெற்றியின் சரி பாதி வரையில் உயர்ந்து நெரிந்தன. அவருடைய முகத்தில் கொடூரமான மாறுதல் ஒன்று உண்டாயிற்று.

"ஆஹா! இளைய பிராட்டிக்கு ஆதித்த கரிகாலர் எழுதிய ஓலை. 'அந்தரங்கமான காரியங்களுக்கு உண்



ஆதித்த சோழன்

மையான வீரன் ஒருவன்—நினைத்த காரியத்தை முடிக்கக் கூடிய தீரன்,—வேண்டும் என்று கேட்டிருந்தாயல்லவா? அதற்காக இவனை அனுப்பியிருக்கிறேன். இவனைப் பூரணமாக நம்பி எந்த முக்கியமான காரியத்தையும் ஒப்புவிக்கலாம்' என்று இளவரசர் தம் கைப்பட எழுதியிருக்கிறுர். ஆ! இதில் ஏதோ மர்மம் இருக்கிறது. இந்த ஓலையைப் பற்றிப் பெரியவருக்குத் தெரியுமோ, என்னவோ? இவன் விஷயத்தில் இன்னும் அதிக ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்!" என்று கோட்டைத் தளபதி தமக்குள்ளே சொல்லிக் கொண்டார். ஓலையைப் பொறுக்கிக் கொண்டு வந்தவனை அழைத்துக் காதோடு சில விஷயங்களைக் கூறினுர். அவனும் உடனே புறப்பட்டுச் சென்றுன்.

*  *  *

சின்னப் பழுவேட்டரையரின் மாளிகையில் வந்தியத் தேவனுக்கு ஆசார உபசாரங்கள் பலமாக நடந்தன. அவனைக் குளிக்கச் செய்து, புதிய உடைகள் அணிந்து கொள்ளக்




பராந்தகச் சக்கரவர்த்தி

கொடுத்தார்கள். நல்ல உடைகள் அணிந்து கொள்வதில் பிரியமுள்ள வந்தியத் தேவனும் குதூகலத்தில் ஆழ்ந்தான். காணமற்போன ஓலையைப் பற்றிய கவலையைக்கூட மறந்து விட்டான். புது உடை உடுத்திய பின்னர் இராஜபோகமான அறுசுவைச் சிற்றுண்டிகளை அளித்தார்கள். பசித்திருந்த வந்தியத் தேவன் அவற்றை ஒரு கை பார்த்தான். பின்னர், அவனைச் சின்னப் பழுவேட்டரையர் மாளிகையின் சித்திர மண்டபத்துக்கு அழைத்துச் சென்றார்கள். "தளபதி வருகிற வரையில் இந்த மண்டபத்திலுள்ள அபூர்வ சித்திரங்களைப் பார்த்துக் கொண்டிருக்கலாம்!" என்றார்கள். இவ்விதம் சொல்லிவிட்டு, காவலர்கள் மூன்று பேர் மண்டபத்தின் வெளியில் உட்கார்ந்து அரட்டையடித்துக்கொண்டே சொக்கட்டான் ஆடத் தொடங்கினார்கள்.

சோழ குலத்தின் புதிய தலைநகரமான தஞ்சைபுரி அந்த நாளில் சிற்ப சித்திரக் கலைக்குப் பெயர் போனதாயிருந்தது. திருவையாற்றில் இசைக் கலையும் நடனக்கலையும் வளர்ந்தது போல் தஞ்சையில் சிற்ப சித்திர கலைகள் வளர்ந்து வந்தன.

முக்கியமாக, சின்னப் பழுவேட்டரையர் மாளிகையில் இருந்த சித்திர மண்டபம் மிகப் பிரசித்தி அடைந்திருந்தது. அந்த மண்டபத்துக்குள் இப்போது வந்தியத்தேவன் பிரவேசித்தான். சுவர்களில் பல அழகிய வர்ணங்களில் தீட்டியிருந்த அற்புதமான சித்திரங்களைப் பார்த்துப் பார்த்துப் புளகாங்கிதம் அடைந்தான். அந்த ஆனந்தத்தில் தன்னை மறந்தான்; தான் வந்த முக்கியமான காரியத்தையுங் கூட மறந்தான்.

சோழ வம்சத்தின் பூர்வீக அரசர்களையும் அவர்களுடைய வாழ்க்கைச் சம்பவங்களையும் சித்திரிக்கும் காட்சிகள் அவனுடைய கவனத்தைக் கவர்ந்து பரவசமடையச் செய்தன. முக்கியமாக, சென்ற நூறு வருஷத்துச் சோழர்களின் சரித்திரம் அந்தச் சித்திர மண்டபத்தில் பெரும் பகுதியை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது. வந்தியத்தேவனுக்கு அதிகமான ஆர்வத்தை உண்டாக்கின சித்திரங்களும் அவைதான்.

இந்தக் கட்டத்தில், சென்ற நூறு வருஷமாகப் பழையாறையிலும் தஞ்சையிலும் இருந்து அரசு புரிந்த சோழ மன்னர்களின் வம்ச பரம்பரையை வாசகர்களுக்குச் சுருக்கமாக ஞாபகப்படுத்த விரும்புகிறோம். இனி இந்தக் கதையில், மேலே வரும் நிகழ்ச்சிகளை அறிந்து கொள்வதற்கு

அதைத் தெரிந்து கொள்வது மிக்க உபயோகமாயிருக்கும்.

தொண்ணூற்றாறு போர்க் காயங்களைத் தன் திருமேனியில் ஆபரணங்களாகப் பூண்ட விஜயாலய சோழனைப் பற்றி முன்னமே கூறியிருக்கிறோம்.

சோழ மன்னர்கள் பரகேசரி, இராஜகேசரி என்னும் பட்டங்களை மாறி மாறிப் புனைந்து கொள்ளுவது வழக்கம். பரகேசரி விஜயாலனுக்குப் பிறகு அவனுடைய புதல்வன் இராஜகேசரி ஆதித்த சோழன் பட்டத்துக்கு வந்தான். அவன் தந்தைக்குத் தகுந்த தனயனாக விளங்கினான். முதலில் அவன் பல்லவர் கட்சியில் நின்று பாண்டியனைத் தோற்கடித்துச் சோழ ராஜ்யத்தை நிலைப்படுத்திக் கொண்டான். பிறகு, பல்லவன் அபராஜித வர்மனோடு போர் தொடுத்தான். யானை மீது அம்பாரியில் இருந்து போர் புரிந்த அபராஜித வர்மன் மீது ஆதித்த சோழன் தாவிப் பாய்ந்து அவனைக் கொன்று தொண்டை மண்டலத்தை வசப்படுத்தினான். பிறகு கொங்கு மண்டலமும் இவன் ஆட்சிக்குள் வந்தது. ஆதித்தன் சிறந்த சிவபக்தன். காவிரி ஆறு உற்பத்தியாகும் சஹ்யமலையிலிருந்து அப் புண்ணிய நதி கடலில் கலக்கும் இடம் வரையில் ஆதித்த சோழன் பல சிவாலயங்களை எடுப்பித்தான்.

இராஜகேசரி ஆதித்த சோழனுக்குப் பிறகு பரகேசரி பராந்தகன் பட்டத்துக்கு வந்தான். நாற்பத்தாறு ஆண்டு காலம் அரசு புரிந்தான். இமயத்தில் புலிச் சின்னம் பொறித்த கரிகால் பெருவளத்தானுக்குப் பின்னர் சோழ வம்சத்தில் மாபெரும் மன்னன் பராந்தகன்தான். வீர நாராயணன், பண்டித வத்சலன், குஞ்சர மல்லன், சூர சிகாமணி என்பன போன்ற பல பட்டப் பெயர்கள் அவனுக்கு உண்டு. "மதுரையும் ஈழமும் கொண்டவன்" என்ற பட்டமும் உண்டு. இந்த முதற் பராந்தகன் காலத்திலேயே சோழ சாம்ராஜ்யம் கன்யா குமரியிலிருந்து கிருஷ்ணா நதி வரையில் பரவியது. ஈழ நாட்டிலும் சிறிது காலம் புலிக்கொடி பறந்தது. தில்லைச் சிற்றம்பலத்துக்குப் பொன் கூரை வேய்ந்து புகழ்பெற்ற பராந்தகனும் இவனேதான். இவனுடைய ஆட்சியின் இறுதி நாட்களில் சோழ சாம்ராஜ்யத்துக்குச் சில பேரபாயங்கள் வந்தன. அந்த நாளில் வடக்கே பெருவலி படைத்திருந்த இராஷ்டிர கூடர்கள் சோழர்களுடைய பெருகி வந்த பலத்தை ஒடுக்க முனைந்தார்கள். சோழ சாம்ராஜ்யத்தின் மீது படை எடுத்து வந்து ஓரளவு வெற்றியும் அடைந்தார்கள்.

பராந்தகச் சக்கரவர்த்திக்கு மூன்று புதல்வர்கள் உண்டு. இவர்களில் வீராதி வீரனாக விளங்கியவன் மூத்த புதல்வனாகிய இராஜாதித்யன் என்பவன். வடநாட்டுப் படையெடுப்பை எதிர்பார்த்து இராஜாதித்யன் திருமுனைப்பாடி நாட்டில் பெரும் சைன்யத்துடன் பல காலம் தங்கியிருந்தான். தன் தந்தையின் பெயர் விளங்கும்படி வீரநாராயண ஏரி எடுத்தான்.

அரக்கோணத்துக்கு அருகில் தக்கோலம் என்னுமிடத்தில் சோழ சைன்




இராஜாதித்தியன்

யத்துக்கும் இராஷ்டிரகூடப் படைகளுக்கும் பயங்கரமான பெரும் போர் நடந்தது. இந்தப்போரில் எதிரிப்படைகளை அதாஹதம் செய்து தன் வீரப் புகழை நிலை நாட்டிய பிறகு, இராஜாதித்யன் போர்க்களத்தில் உயிர் துறந்து வீர சொர்க்கம் அடைந்தான். இவனும் பல்லவ அபராஜித வர்மனைப் போல் யானைமீதிருந்து போர்புரிந்து யானை மேலிருந்தபடியே இறந்தபடியால், இவனை "ஆனைமேல் துஞ்சிய தேவன்" என்று கல்வெட்டுச் சாஸனங்கள் போற்றிப் புகழ்கின்றன.

இராஜாதித்யன் மட்டும் இறந்திராவிட்டால், அவனே பராந்தக சக்கரவர்த்திக்குப் பிறகு சோழ சிம்மாதனம் ஏறியிருக்க வேண்டும். இவனுடைய சந்ததிகளே இவனுக்குப் பின்னர் முறையாகப் பட்டத்துக்கு வந்திருக்க வேண்டும்.

ஆனால் இளவரசன் இராஜாதித்யன் பட்டத்துக்கு வராமலும் சந்ததியில்லாமலும் இறந்துவிடவே, இவனுடைய இளைய சகோதரர் கண்டராதித்த தேவர் தந்தையின் விருப்பத்தின்படி இராஜகேசரி பட்டத்துடன் சிங்காதனம் ஏறினர்.

இவர் தமது தந்தையையும் பாட்டனையும் போலவே சிவபக்தி மிகுந்தவர். அத்துடன் தமிழன்பு மிக்கவர். உண்மையில் இவருக்கு இராஜ்யம் ஆளுவதில் அவ்வளவு சிரத்தையே இருக்கவில்லை. ஆலய வழிபாட்டிலும் தமிழ் இன்பத்திலும் அதிகமாக ஈடுபட்டிருந்தார். மகான்களாகிய நாயன்மார்களைப் பின்பற்றிச் சிவபெருமான் மீது துதிப் பாடல்கள் பாடினர். 'திருவிசைப்பா' என்று வழங்கும் இப்பாடல்களில் கடைசிப் பாட்டில் இவர் தம்மைப் பற்றியே பின்வருமாறு சொல்லிக் கொண்டிருக்கிறார் :—

"சீரான்மல்கு தில்லைச் செம்பொன்
அம்பலத்தாடி தன்னைக்
காரார் சோலைக் கோழி வேந்தன்
தஞ்சையர்கோன் கலந்த
ஆராவின் சொற் கண்டராதித்தன்
அருந்தமிழ் மாலை வல்லார்
பேரா உலகிற் பெருமை யோடும்
பேரின்ப மெய்துவரே !"

விஜயாலயனுக்குப் பிற்பட்ட சோழ மன்னர்கள் பழையாறையிலும் தஞ்சையிலும் வசித்த போதிலும் பூர்வீகச் சோழத் தலைநகர் உறையூர் என்னும் பாத்தியதையை விட்டுவிடவில்லை. உறையூருக்கு இன்னொரு பெயர் கோழி என்பதாகும். ஆகையால் சோழ மன்னர்கள் தங்களைக் "கோழி வேந்தர்" என்று சொல்லிக் கொண்டார்கள்.

கண்டராதித்த தேவர் சிம்மாசனத்திலிருந்து பெயரளவில் அரசு புரிந்த போதிலும், உண்மையில் அவருடைய இளைய சகோதரனாகிய அரிஞ்சயன்தான் இராஜ்ய விவகாரங்களைக் கவனித்து வந்தான். இராஜாதித்யனுக்குத் துணையாக அரிஞ்சயன் திருநாவலூர் முதலிய இடங்களில் சைன்யங்களுடன் தங்கியிருந்தான். இராஷ்டிரகூடர்களுடன் வீரப் போர் நடத்தினன். தக்கோலத்தில் சோழ சைன்யத்துக்கு நேர்ந்த பெருந் தோல்வியை விரைவிலேயே வெற்றியாக மாற்றிக் கொண்டான். இராஷ்டிரகூடர் படையெடுப்பைத் தென்பெண்ணைக்கு அப்பாலேயே தடுத்து நிறுத்தினன்.

எனவே, இராஜகேசரி கண்டராதித்த சோழர் தம் தம்பி அரிஞ்சயனுக்கு யுவராஜ பட்டம் சூட்டி அவனே தமக்குப் பின் சோழ சிங்காதனத்துக்கு உரியவன் என்றும் நாடறியத் தெரிவித்து விட்டார்.

இவ்விதம் கண்டராதித்தர் முடிவு செய்ததற்கு இன்னொரு முக்கிய காரணமும் இருந்தது. இவருடைய மூத்த மனைவி இவர் பட்டத்துக்கு வருவதற்கு முன்பே காலமாகிவிட்டாள். பிறகு வெகு காலம் கண்டராதித்தர் மணம் புரிந்து கொள்ளவில்லை.



ஆனால் இவருடைய தம்பி அரிஞ்சயனுக்கோ அழகிலும் அறிவிலும் ஆற்றலிலும் சிறந்த புதல்வன் இருந்தான். பாட்டனாரின் பராந்தகன் என்னும் பெயரையும், மக்கள் அளித்த சுந்தர சோழன் என்னும் காரணப் பெயரையும் சூட்டிக் கொண்டிருந்தான்.

எனவே, தமக்குப் பிறகு தமது சகோதரன் அரிஞ்சயனும் அரிஞ்சயனுக்குப் பிறகு அவனுடைய புதல்வன் சுந்தரசோழனும் பட்டத்துக்கு வர வேண்டும் என்று கண்டராதித்தர் திருவுளங் கொண்டார். இந்த ஏற்பாட்டிற்குச் சாமந்த கணத்தினர், தண்டநாயகர்கள், பொதுஜனப் பிரதிநிதிகள் எல்லாருடைய சம்மதத்தையும் ஒருமனதாகப் பெற்றுப் பகிரங்கமாக உலகறியத் தெரிவித்தும் விட்டார்.

இந்த ஏற்பாடுகள் எல்லாம் நடந்து முடிந்த பிறகு கண்டராதித்தரின் வாழ்க்கையில் ஓர் அதிசய சம்பவம் நிகழ்ந்தது. மழவரையன் என்னும் சிற்றரசன் திருமகளை அவர் சந்திக்கும்படி நேர்ந்தது. அந்த மங்கையர் திலகத்தின் அழகும் அடக்கமும் சீலமும் சிவ பக்தியும் அவர் உள்ளத்தைக் கவர்ந்தது. முதிர்ந்த பிராயத்தில் அந்தப் பெண்மணியை மணந்து கொண்டார். இந்தத் திருமணத்தின் விளைவாக உரியகாலத்தில் ஒரு குழந்தையும் உதித்தது. அதற்கு மதுராந்தகன் என்று பெயரிட்டுப் பாராட்டிச் சீராட்டி வளர்த்தார்கள். ஆனால் அரசர் அரசி இருவருமே இராஜ்யம் சம்பந்தமாக முன்னம் செய்திருந்த ஏற்பாட்டை மாற்ற விரும்பவில்லை.



தம்பதிகள் இருவரும் சிவ பக்தியிலும், விரக்தி மார்க்கத்திலும் ஈடுபட்டவர்களாதலால் தங்கள் அருமைப் புதல்வனையும் அந்த மார்க்கத்திலேயே வளர்க்க விரும்பினார்கள். கேவலம் இந்த உலக சாம்ராஜ்யத்தைக் காட்டிலும் சிவலோக சாம்ராஜ்யம் எவ்வளவோ மேலானது என்று நம்பியவர்களாதலால், அந்தச் சிவலோக சாம்ராஜ்யத்துக்கு உரியவனாக மதுராந்தகனை வளர்க்க ஆசைப்பட்டார்கள். ஆகையால் கண்டராதித்தர் தமக்குப் பிறகு தம் சகோதரன் அரிஞ்சயனும் அவனுடைய சந்ததிகளுமே சோழ சாம்ராஜ்யத்துக்கு உரியவர்கள் என்ற தமது விருப்பத்தைப் பகிரங்கப் படுத்தி நிலைநாட்டினார்.

எனவே, இராஜாதித்தன், கண்டராதித்தர் என்னும் இரு உரிமையாளர் வம்சத்தைத் தாண்டி அரிஞ்சயன் வம்சத்தாருக்குச் சோழ சிங்காதனம் உரிமையாயிற்று.

கண்டராதித்தருக்குப் பிறகு அதிக காலம் பரகேசரி அரிஞ்சயன் ஜீவியவந்தனாக இருக்கவில்லை. ஒரு வருஷத்திலேயே தமையனாரைப் பின் தொடர்ந்து தம்பியும் கைலாச பதவிக்குச் சென்று விட்டான்.

பின்னர், இளவரசர் சுந்தர சோழருக்கு நாட்டாரும் சிற்றரசர்களும் பிற அரசாங்க அதிகாரிகளும் சேர்ந்து முடிசூட்டி மகிழ்ந்தார்கள். இராஜ கேசரி சுந்தர சோழரும் அதிர்ஷ்ட வசத்தினால் தமக்குக் கிடைத்த மகத்தான பதவியைத் திறம்படச் சிறப்பாக வகித்தார். ஆட்சியின் ஆரம்ப காலத்தில் பல வீரப் போர்கள் புரிந்து பாண்டிய நாட்டையும் தொண்டை மண்டலத்தையும் மீண்டும் வென்றார். இராஷ்டிர கூடப் படைகளைத் தென்பெண்ணைக் கரையிலிருந்து விரட்டி அடித்தார்.

சுந்தரசோழ சக்கரவர்த்தியின் புதல்வர்களான ஆதித்த கரிகாலரும் அருள்மொழி வர்மரும் தந்தையை மிஞ்சக் கூடிய இணையற்ற வீரர்களாயிருந்தார்கள். அவர்கள் இருவரும் தந்தைக்குப் பரிபூரண உதவி செய்தார்கள். அவர்கள் மிகச் சிறு பிராயத்திலேயே போருக்குச் சென்று முன்னணியில் நின்று போர் புரிந்தார்கள்; அவர்கள் சென்ற போர்முனைகளிலெல்லாம் விஜயலக்ஷ்மி சோழர்களின் பக்கமே நிலை நின்று வந்தாள்.

## அத்தியாயம் 31

# "திருடர்! திருடர்!"

விஜயாலய சோழர் முதல் இரண்டாம் பராந்தகராகிய சுந்தர சோழர் வரையில் சோழ மன்னர்களின் உயிர்ச் சித்திரங்களை நம் வீரன் வந்தியத்தேவன் பார்த்து மகிழ்ந்தான். ஆஹா! இவர்களில் ஒவ்வொருவரும் எப்பேர்ப்பட்டவர்கள்? எத்தகைய மகா வீரர்கள்! உயிரைத் திரணமாக மதித்து எவ்வளவு அரும் பெரும் செயல்களை இயற்றியிருக்கிறார்கள்! கதைகளிலும் காவியங்களிலும் கூட இப்படிக் கேட்டதில்லையே? இத்தகைய மன்னர் பரம்பரையைப் பெற்ற சோழ நாடு பாக்கியம் செய்த நாடு; இன்று அவர்களுடைய ஆட்சியின் கீழ் உள்ள நாடுகள் எல்லாம் பாக்கியம் செய்த நாடுகள்தான்.

மேற்கூறிய சோழ மன்னர்களின் சரித்திரங்களைச் சித்திரித்த காட்சிகளில் இன்னொரு முக்கியமான அம்சத்தை வந்தியத்தேவன் கவனித்தான். ஒவ்வொரு சோழ அரசருக்கும் பழுவூர்ச் சிற்றரசர் வம்சத்தினர் தலைசிறந்த உதவிகள் செய்திருக்கிறார்கள்; வீரத் தொண்டுகள் பல புரிந்து வந்திருக்கிறார்கள்.

முத்தரையர் வசத்திலிருந்த தஞ்சைக் கோட்டையை முற்றுகையிட்டு முதலில் அந்நகரில் பிரவேசித்தவர் ஒரு பழுவேட்டரையர். இரு காலும் இழந்த விஜயாலய சோழன் திருப்புறம்பயம் போர்க்களத்தில் புகுந்து அதிபராக்கிரமச் செயல்களைப் புரிந்த போது அவனுக்குத் தோள் கொடுத்துத் தூக்கிச் சென்றவர் ஒரு பழுவேட்டரையர். ஆதித்த சோழன் தலையில் கிரீடத்தை வைத்துப் பட்டாபிஷேகம் செய்வித்தவர் ஒரு பழுவேட்டரையர். ஆதித்த சோழன் யானை மீது பாய்ந்து பல்லவ அபராஜித வர்மனைக் கொன்ற போது ஆதித்தன் பாய்வதற்கு வசதியாக முதுகும் தோளும் கொடுத்தவர்

ஒரு பழுவேட்டரையர். பராந்தக சக்கரவர்த்தி நடத்திய பல போர்களில் முன்னணியில் புலிக்கொடியை எடுத்துச் சென்றவர்கள் பழுவேட்டரையர்கள். இராஜாதித்யன் போர்க்களத்தில் காயம்பட்டு விழும்போது அவனை ஒரு பழுவேட்டரையர் தன் மடியின்மீது போட்டுக் கொண்டு, "இராஷ்டிரகூடப் படைகள் தோற்று ஓடுகின்றன!" என்ற செய்தியைத் தெரிவித்தார். அவ்விதமே அரிஞ்சயருக்கும் சுந்தர சோழருக்கும் வீரத் தொண்டுகள் புரிந்து உதவியவர்கள் பழுவேட்டரையர்கள்தான்.

இதையெல்லாம் சித்திரக் காட்சிகளில் பிரத்யட்சமாகப் பார்த்த வல்லவரையன் சொல்ல முடியாத வியப்பில் ஆழ்ந்தான். அண்ணன் தம்பிகளான பழுவேட்டரையர்கள் இன்று சோழ நாட்டில் இவ்வளவு ஆதிக்கம் வகிப்பதற்குக் காரணம் இல்லாமற் போகவில்லை. சுந்தரசோழர் எது விஷயத்திற்கும் அவர்களுடைய யோசனையைக் கேட்டு நடப்பதிலும் வியப்பில்லை.

ஆனால், தான் இப்போது பெரிய சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டிருப்பது என்னவோ நிச்சயம். சின்னப் பழுவேட்டரையருக்குத் தன் பேரில் ஏதோ சந்தேகம் ஜனித்து விட்டது. பெரியவர் வந்து விட்டால், அந்தச் சந்தேகம் ஊர்ஜிதமாகிவிடும். முத்திரை மோதிரத்தின் குட்டு வெளியாகிவிடும். பிறகு தன்னுடைய கதி அதோகதிதான்! சின்னப் பழுவேட்டரையரின் நிர்வாகத்திலுள்ள தஞ்சாவூர்ப் பாதாளச் சிறையைப் பற்றி வல்லவரையன் கேள்விப்பட்டிருந்தான். அதில் ஒருவேளை தன்னை அடைத்து விடக்கூடும். பாதாளச் சிறையில் ஒருவனை ஒரு தடவை அடைத்து விட்டால், பிறகு திரும்பி வெளியேறுவது அநேகமாக நடவாத காரியம். அப்படி வெளியேறினாலும், எலும்பும் தோலுமாய், அறிவை அடியோடு இழந்து, வெறும் பித்துக் குளியாகத்தான் வெளியேற முடியும்!

ஆகா! இத்தகைய பேரபாயத்திலிருந்து தப்புவது எப்படி? ஏதாவது யுக்தி செய்து பெரியவர் வருவதற்குள்ளே கோட்டையை விட்டு வெளியேறிவிட வேண்டும். பழுவூர் இளைய




சிவபக்தர் கண்டராதித்தர்

ராணியைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை கூட நம் வீரனுக்கு இப்போது போய்விட்டது. உயிர் பிழைத்து, பாதாளச் சிறைக்குத் தப்பி, வெளியேறி விட்டால் போதும்! ஓலையில்லாவிட்டாலும், குந்தவைப் பிராட்டியை நேரில் பார்த்துச் செய்தியைச் சொல்லி விடலாம். நம்பினால் நம்பட்டும்; நம்பாவிட்டால் போகட்டும்; ஆனால் தஞ்சைக் கோட்டையை விட்டு வெளியேறுவதற்கு என்ன வழி?

தான் உடுத்தியிருந்த பழைய ஆடைகள் என்ன ஆயின என்ற சந்தேகம் திடீரென்று வந்தியத்தேவன் மனதில் உதயமாயிற்று. தன்னுடைய உடைகளைப் பரிசீலனை செய்து பார்ப்பதற்காகவே தனக்கு இவ்வளவு உபசாரம் செய்து புது ஆடைகளும் கொடுத்திருக்கிறார்கள்! குந்தவை தேவியின் ஓலை தளபதியிடம் அகப்பட்டிருக்க வேண்டும்; சந்தேகமில்லை. தான் புலவர்களுடன் திரும்பிப் போய்விடா வண்ணம் தன் கையை இரும்புப் பிடியாக அவர் பிடித்ததின் காரணமும் இப்போது தெரிந்தது. ஒரு ஆளுக்கு மூன்று ஆளாய்த் தன்னுடன் அனுப்பிய

காரணமும் தெரிந்தது. ஆகா! ஒரு யுக்தி! உடனே ஒரு யுக்தி கண்டு பிடிக்க வேணும்! பழுவேட்டரையர் திரும்புவதற்குள்ளே கண்டு பிடிக்க வேணும்!—இதோ தோன்றிவிட்டது ஒரு யுக்தி! பார்க்க வேண்டியதுதான் ஒரு கை! வீர வேல் வெற்றி வேல்!

வந்தியத்தேவன் சித்திர மண்டபத்தின் பலகணி வழியாக வெளியே பார்த்தான். சின்னப் பழுவேட்டரையர் பரிவாரங்கள் புடைசூழக் குதிரை மேல் வந்து கொண்டிருந்தார். ஆகா! இதுதான் சமயம்! இனி ஒருகணமும் தாமதிக்கக் கூடாது.

வாசற்படிக்குப் பக்கத்தில் உட்கார்ந்து சொக்கட்டான் ஆடிய ஏவலாளர்கள் மூவரும் ஆட்டத்தை நிறுத்திவிட்டு எழுந்தார்கள். மாளிகை வாசலில் சின்னப் பழுவேட்டரையர் வரும் சத்தம் அவர்களுடைய காதிலும் விழுந்தது.

வந்தியத்தேவன் அவர்கள் அருகில் நெருங்கி, "அண்ணன்மார்களே! நான் தரித்திருந்த உடைகள் எங்கே?" என்று கேட்டான்.

"அந்த அழுக்குத் துணிகள் இப்போது என்னத்துக்கு? எஜமான் உத்தரவுப்படி புதிய பட்டுப் பீதாம்பரங்கள் உனக்குக் கொடுத்திருக்கிறோமே!" என்றான் ஒருவன்.

"எனக்குப் புதிய உடைகள் தேவையில்லை. என்னுடைய பழைய துணிகளே போதும். அவற்றைச் சீக்கிரம் கொண்டு வாருங்கள்!"

"அவை சலவைக்குப் போயிருக்கின்றன. வந்த உடனே தருகிறோம்."

"அதெல்லாம் முடியாது! நீங்கள் திருடர்கள். என்னுடைய பழைய உடையில் பணம் வைத்திருந்தேன். அதைத் திருடிக்கொள்வதற்காக எடுத்திருக்கிறீர்கள். உடனே கொண்டு வாருங்கள். இல்லாவிட்டால்...!"

"இல்லாவிட்டால், என்ன செய்து விடுவாய், தம்பி! எங்கள் தலையை வெட்டித் தஞ்சாவூருக்கு அனுப்பி விடுவாயோ? ஆனால் இதுதான் தஞ்சாவூர்; ஞாபகம் இருக்கட்டும்!"

"அடே! என் துணிகளை உடனே கொண்டு வருகிறாயா, இல்லையா?"

"இருந்தால்தானே தம்பி, கொண்டு வருவேன்! அந்த அழுக்குத் துணிகளை வெட்டாற்று முதலைகளுக்குப் போட்டு விட்டோம்! முதலை வயிற்றில் போனது திரும்பி வருமா?"

"திருட்டுப் பயல்களே! என்னுடன் விளையாடுகிறீர்களா! இதோ உங்கள் எஜமானரிடம் சென்று சொல்கிறேன், பாருங்கள்!" என்று வந்தியத்தேவன் வாசற்படியைத் தாண்டத் தொடங்கினான். மூவரில் ஒருவன் அவனைத் தடுப்பதற்காக நெருங்கினான். வந்தியத்தேவன் அவனுடைய மூக்கை நோக்கிப் பலமாக ஒரு குத்து விட்டான். அவ்வளவுதான்; அந்த ஆள் மல்லாந்து கீழே விழுந்தான். அவன் மூக்கிலிருந்து இரத்தம் சொட்டத் தொடங்கியது.

இன்னொருவன் வந்தியத்தேவனுடன் மல் யுத்தம் செய்ய வருகிறவனைப்போல் இரண்டு கைகளையும் முன்னால் நீட்டிக் கொண்டு வந்தான். நீட்டிய கைகளை வந்தியத்தேவன் பற்றிக்கொண்டு, தன் கால்களில் ஒன்றை எதிராளியின் கால்களின் மத்தியில் விட்டு ஒரு முறுக்கு முறுக்கினான். அவ்வளவுதான்; அந்த மனிதன் 'அம்மாடி' என்று அலறிக்கொண்டு கீழே உட்கார்ந்து விட்டான். இதற்குள் மூன்றாவது ஆளும் நெருங்கி வரவே, வந்தியத்தேவன் தன் கால்களை எடுத்துக்கொண்டு ஒரு காலால் எதிரியின் முழங்கால் முட்டைப் பார்த்து ஒரு உதை விட்டான். அவனும் அலறிக்கொண்டு கீழே விழுந்தான்.

மூன்று பேரும் சட்டுப்புட்டென்று எழுந்து மறுபடியும் வந்தியத்தேவனைத் தாக்குவதற்கு வளைத்துக் கொண்டு வந்தார்கள். வெகு ஜாக்கிரதையாகவே வந்தார்கள்.

இதற்குள் மாளிகை வாசலில் குதிரை வந்து நின்ற சத்தம் கேட்டது.

வந்தியத்தேவன் தன் குரலின் சக்தியை யெல்லாம் உபயோகித்துத் "திருடர்கள்! திருடர்கள்!" என்று சத்தமிட்டுக் கொண்டே அவர்கள் மீது பாய்ந்தான். மூன்று பேரும் அவனைப் பிடித்து நிறுத்தப் பார்த்தார்கள். மறுபடியும் "திருட்டுப் பயல்கள்!" "திருட்டுப் பயல்கள்!" என்று பெருங் குரலில் கூச்சலிட்டான் வந்தியத் தேவன்.

அச்சமயம் சின்னப் பழுவேட்டரையர் "இங்கே என்ன ரகளை?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே வந்தார்.

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 23. பித்தப் பை

நாம் சாப்பிடும் ஆகாரம் சரிவர ஜீரணமாகப் பித்தநீர் அவசியம். ஆகாரப் பையிலிருந்து ஆகாரம் சிறுகுடலில் போய்ச் சேரும்போது, அங்கு இந்தப் பித்தநீர் வந்து கலக்கிறது. பித்தப் பையானது, வலது விலா எலும்புக்குக் கீழே சற்று இடது பக்கமாய், இருதயத்திற்கு மூன்று அங்குலம் தள்ளியிருக்கிறது. இது பித்தத்தைச் சேகரித்து வைத்துக் கொள்ளும் ஒரு பை ஆகும். கல்லீரலிலிருந்து வரும் பித்த நீரைத் தேக்கி வைத்துக் கொண்டு, ஆகாரம் சிறு குடலில் இறங்கும் போது, அதன் நீரை அனுப்புகிறது. ஆகாரம் எல்லாம் சிறுகுடலில் சென்ற பின், மறுபடியும் கல்லீரலிலிருந்து வரும் நீரைத் தேக்கி அடுத்து வரும் ஆகாரத்திற்கு அனுப்புவதற்காகத் தயார் செய்து கொள்ளும்.

பித்த நீர், நல்ல மஞ்சள் நிறமாய்க் கோழி முட்டையிலிருக்கும் மஞ்சள் கருவைப் போல், தாராளமாய் எங்கும் ஓடக் கூடிய தன்மை யுடையது.

பித்தப் பை ஆள்காட்டி விரலைவிடச் சற்று நீளமாய், மேல்பாகம் கனத்தும், அடியில் சிறுத்தும் இருக்கும். இதிலிருந்து ஒரு நரம்புக் குழாய் ஆகாரப் பையின் முடிவில் வந்து சேருகிறது. அது சாதாரணப் பென்சிலில் பாதி அளவு கனம்தான் இருக்கிறது. கல்லீரலிலிருந்து பித்தப்பைக்குப் பித்த நீரைக் கொண்டுபோய்ச் சேர்க்கவும் ஒரு நரம்புக் குழாய் உண்டு. அதனுடன் இதுவும் சேர்ந்து பிரிகிறது.

சிலருக்குப் பித்தப் பையில் பித்த நீர் அதிகம் இருக்கும். சிலருக்குக் குறைந்திருக்கும். சிலருக்கு ஒரு தேக்கரண்டி அளவே இருக்கும். சிலருக்கு ஒரு கப் அளவுகூட இருக்கும். ஆனால் சாதாரணமாக இருக்க வேண்டிய அளவு இரண்டு அல்லது மூன்று அவுன்ஸே.

இந்த நுட்பமான அவயவம் ஒழுங்காக வேலை செய்யும் வரை, ஒரு கோளாறும் வராது. இது கெட்டால் பலவித இன்னல்களுக்கு ஆளாக வேண்டி நேரும்.

இது கெடுவதற்குப் பல காரணங்கள் உண்டு. டான்சில் (தொண்டையில் சதை வளருதல்) அப்பெண்டிக்ஸ் (குடல்வால் அயர்ச்சி) எலும்பு குழிவிழுதல் முதலியவைகளிலிருந்து கிருமிகள் பித்தப்பையைத் தொற்றும். டைபாய்ட் ஜுரத்தினாலும் பித்தப் பையில் அயர்ச்சி ஏற்படும்.

இவைகளைத் தவிர நாம் வேறு அதைக் கெடுக்கிறோம். ஒரு நாளில் இரண்டு அல்லது மூன்று வேளை உணவு மிதமாய் உண்பவர்களுக்கு யாதொரு தொந்தரவும் உண்டாகாது. கூட யோகாசனங்களும் பயின்று வந்தால் என்றென்றும் பயப் படத் தேவையில்லை.

ஆனால் அப்படியே எல்லோரும் நடக்கிறார்களா வென்றால், அதுதான் கிடையாது. நண்பர்களின் வற்புறுத்தலுக்காகவும், நாக்கின் ருசிக்காகவும், அசட்டு மதிப்பிற்காகவும் நாம் நம்மையே கெடுத்துக் கொள்ளுகிறோம். ஆகாரப்பை, குடல், பித்தப்பை முதலியன இருக்கின்றன. அவை ஓரளவுதான் வேலை செய்யும் சக்தி யுடையது. அவற்றிற்கு அதிக வேலை கொடுத்தால், நாளை நமக்குத்தானே கஷ்டம், நாம்தானே சிரமப்பட வேண்டும் என்று யோசிப்பதில்லை. கண்ட நேரத்தில் அகப்பட்டவைகளை எல்லாம் இஷ்டப் படி சாப்பிட வேண்டியது. சாப்பிட்டதை எல்லாம் மாவரைத்துத் தள்ளுவதுபோல் தள்ள வேண்டியது வயிற்றின் கடமை என்று நினைக்கிறோம். அவற்றைப் பற்றியெல்லாம் நினைக்க நேரமேது! எப்படியோ நாளைக் கடத்தி வருகிறோம்.

அஜீரணமா? பேதியா? சரி, டாக்டரிடம் போய் மருந்து வாங்கு. தலைவலியா? ஒரு ஆஸ்ப்ரோ மாத்திரையை விழுங்கு. மந்தமாய் இருக்கிறதா? ஒரு கப் காப்பி சாப்பிடு. எல்லாம் சரியாய்ப் போய் விடும் என்று இன்னும் மேலும் மேலும் அல்லவா உறுப்புக்களுக்குத் தொந்தரவு கொடுக்கிறோம்? சென்னையில் ஜட்கா வண்டிக்காரன், பலவீனமான தன் குதிரையை மேலும் அடித்து, அடித்து ஓட்டுவதைப் போல, மருந்தை விழுங்கி, விழுங்கி நம் வாழ்நாளை ஓட்டி வருகிறோம்.

ஒரு தடவை சாப்பிட்ட உணவுக்கு வேண்டிய பித்தநீரைக் கொடுத்துவிட்டுப் பித்தப்பை தன் சக்தியைச் சேகரித்துக் கொள்ளும்போது, மறுபடியும் ஆகாரம் வந்தால் என்ன செய்யும்! தன் கடமையென்று, வேலையைத் துவக்குகிறது. இப்படியே செய்து செய்து பலவீனமடைந்து கெட்டு விடுகிறது. அதுவும் சாதாரண ஆகாரமாயிருந்தால் பித்தப் பைக்கு அவ்வளவு வேலை இருக்காது. கொழுப்பு வஸ்துக்களாய் இருந்தால் இன்னும் அதிகக் கஷ்டப்பட்டு அதை ஜீரணமாக்க வேலை செய்ய வேண்டி யிருக்கிறது. இந்த நிலைமையில் பித்தப்பை பழுதடை



"நீயும் உன் மாமியாரும் ஒருத்தருக் கொருத்தர் சண்டை போட்டுக் கொண்டால், உன் ஆத்துக்காரர் யார் பக்கமும் பேச மாட்டாரா?"
"அவர்தான் வக்கீல் ஆச்சே மாமி! பீஸ் வாங்காமல் பேசுவாரா?"

கிறது. பித்த நீர் வரும் குழாய் பலவீனப்பட்டுப் பித்த நீர் வரத் தடைப்படுகிறது. வழியில் சிறு சிறு கற்களாகக் கட்டிக் கொள்ளுகிறது. சிறு மணல் பருமன் முதல் ஒரு கோழி முட்டை அளவு கூடப் பித்தக் கல் கட்டுவதுண்டு. முதலில் சிறுக ஆரம்பித்து நாளாக நாளாகக் கனத்து வரும். நல்ல முற்றின கற்களை எக்ஸ்ரே எடுத்தால் தெரியும். சிறு கற்களாக இருக்கும் போதே கவனித்துச் சிகிச்சை செய்தால் நல்லது. பெரிய கற்களாக மாறி விட்டால் ஒன்றும் செய்ய முடியாது. பித்தக் கற்களைக் கரைக்க எந்த மருந்தாலும் வைசியாலும் முடியாது. அறுத்து ஆப்பரேஷன் செய்து எடுக்க வேண்டியதுதான்.

சிலருக்குப் பித்தக் கல்லை எடுத்துவிட்டு, கல்லீரலிலிருந்து பித்தப்பைக்குப் பித்த நீர் சேரவிடாமல் தடுத்து அதை உலர வைத்து விடுவார்கள். சிலருக்குப் பித்தப்பை பழுதடைந்திருந்தால் பித்தப் பையையே வெட்டி எடுத்து விடுவார்கள்.

பித்தப் பையில் கல் சேர்ந்து பழுதடைவதாலோ, கிருமிகள் தொற்றினாலோ சில சமயம் சீழ் பிடித்துக் கொள்ளும். அப்பொழுது நோயாளியின் வேதனை சொல்ல முடியாது. வயிறு மந்தமாக இருக்கும். வாயுப் பொருமல், நெஞ்செரிவு, சாப்பிட்டவுடன் வயிறு கனத்தல் முதலியதுடன், திடீரென்று வயிற்றின் மேல் பள்ளத்திலிருந்து முதுகுப்புறம் நோக்கி ஆரம்பிக்கும் குத்தல் வலி தாங்க முடியாது. எந்தப் பக்கம் புரண்டு படுத்தாலும் வலி பொறுக்க முடியாது. வியர்வை கொட்டும். இது விட்டுவிட்டு வலிக்கும். இந்த சமயத்தில் கவனித்து ஆப்பரேஷன் செய்தால் நல்லது. இல்லையானால் பிராணனுக்கே ஆபத்து விளைவிக்கும்.

பித்தப் பையில் சிறு மணல்போல் கல் இருக்கும்போதாவது ஆசனம் பழகினால் பயனடையலாம். கற்கள் பெருகிப் பெரிதாய் விட்டபின் ஆசனத்தினால் பயனடைய முடியாது. ஆப்பரேஷன் செய்ய வேண்டியதுதான்.

கண் கெட்டபின் சூரிய நமஸ்காரம் எதற்கு? நோய் என்னும் வெள்ளம் வருமுன், ஆகார நியமனங்களுடன் ஆசனம் பழகி அணை போடுங்கள். சரீரக் கோயிலைப் போற்றி நோய் இல்லாமல் பாதுகாத்துக் கொள்ளுங்கள்.

பித்தக் கல் உண்டாகி, பித்தநீர் ஆகாரத்துடன் சேரத் தடைப்பட்டால், இரத்தம் கல்லீரலிலிருந்து அந்த நீரை எடுத்துக் கொள்கிறது. அப்பொழுது பார்த்ததெல்லாம் மஞ்சள் நிறமாய்த் தோன்றும். கண் வெள்ளை விழிகள் மஞ்சள் வர்ணமடையும். இரத்த சோகை யுண்டாகும். முகத்தில் தெம்பே இராது. மயக்கமும், கிறுகிறுப்பும் சிலருக்கு உண்டாகும்.

இதை மாந்திரீகத்தால் போக்கலாம் என்ற குருட்டு நம்பிக்கையும் சிலருக்கு உண்டு. அந்த மந்திரக்காரன் மந்திரம் செய்துவிட்டு என்ன பத்தியம் சொல்லுகிறான் என்று கவனியுங்கள். காரம், புளி, உப்பு, கடுகு, எண்ணெய் தாளிப்பு முதலியன இல்லாமல், பால், தயிர் சாதம் மட்டும் சாப்பிடும்படி சொல்லுவான். அம்மாதிரி சாப்பிட்டால் ஏன் குணமுண்டாகாது?

மேற்படி பத்தியத்துடன் மஞ்சள் கருசலாங்கண்ணிக் கீரையைத் தினமும் ஆகாரத்துடன் சேர்த்து வந்து, கூடவே மயூராசனமும் பழகினால், மஞ்சட்காமாலை சில நாளிலேயே மாயமாய் மறைந்து விடும். கருசலாங் கண்ணியில் இருக்கும் இரும்புச் சத்து, ரத்த சோகையைப் போக்கிப் பித்தநீரை அகற்றி இரத்தத்தில் சிவப்பு அணுக்களை விருத்தி செய்கிறது. மயூராசனமானது ஓய்ந்துபோன, உணர்ச்சி அற்றுப்போன பித்தப்பை, கல்லீரல், பித்தப்பைக் குழாய் முதலியவைகளுக்குப் புத்துயிர் அளித்துப் பழையபடி வேலை செய்யச் செய்கிறது. வளர்ந்து போன மணல் போன்ற கற்கள் மயூராசனம் செய்யும்போது ஏற்படும் அழுத்தத்தில் வெளியில் தள்ளப்படுகின்றன. இதைப்போன்ற சிறந்த மார்க்கம் வேறெதிலும் கிடையாது. மயூராசனம் ஒன்றே மஞ்சட்காமாலை, இரத்த சோகை, அஜீரணம், தலைவலி, மயக்கம், சோம்பல், வயிற்றுவலி, நெஞ்செரிவு முதலியவைகளுக்குச் சஞ்சீவி. (தொடரும்)

# முதல் தாம்பூலம்

நா. ராமச்சந்திரன்

"என்ன இப்படிச் செய்து இருக்கிறீர்களே? டிக்கெட்டு வாங்கும்போது நான் படித்துப் படித்துச் சொன்னேன். கடைசியில் என்னுடைய 'ஸீட்'டை ஆண்கள் பக்கத்திலேயே போட்டிருக்கிறீர்களே?" என்று சற்றுக் கோபமாகவே கேட்டாள் இந்திராணி.

ராமமூர்த்தி பதில் சொல்வதற்குச் சற்றுத் தயங்கினான். பிறகு சமாளித்துக் கொண்டான். "கடைசி 'ஸீட்'டாக இருக்கிறதே என்று போட்டு வைத்தேன். வேண்டுமானால் நாளைக்கே மாற்றி விடுகிறேன்" என்று சமாதானம் சொன்னான்.

நல்ல வேளையாக இந்திராணி பதில் ஒன்றும் பேசவில்லை. "நாளைக்கு ஞாபகமாக அதை முதலில் செய்து விடுங்கள்" என்று ரத்தினச் சுருக்கமாகப் பதில் சொல்லிவிட்டுப் போய்விட்டாள்.

அவளது சிவந்த மேனிக்கு ஏற்ற நீல நிற சில்க் புடவையும், 'ஆர்கண்டி' வாயில் ரவிக்கையும் அவளைப் பூலோக ரம்பையாகச் செய்திருந்தது. பதில் பேசிவிட்டு, கையில் வைத்திருந்த 'பிளாஸ்டிக்' பை ஆட, காதுகளில் அணிந்திருந்த டோலக்குகள் குலுங்க அவள் அன்னநடை போட்டு ஹாலுக்கு வெளியே போகும் வரை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான் ராமமூர்த்தி. அப்புறம் ஒரு பெருமூச்சு விட்டான்.

## 2

அந்த வருடம் முடிவில் நடக்கும் சங்கீத விழா பத்து நாட்களுக்கும் 'ரிஸர்வ்' செய்த அங்கத்தினர்களுக்கு இட வசதிகள் ஹாலில் செய்து கொடுக்கும் பொறுப்பு ராமமூர்த்தியின் தலையில் விழுந்திருந்தது. முதலில் அந்த வேலையை ஒத்துக்கொள்ள மறுத்த போதிலும் சபாக் காரியதரிசி ரொம்பவும் கேட்டுக் கொண்டதின்பேரில் அதைச் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது.

முதல் நாள் கச்சேரிக்கு அவசர அவசரமாக 'ரிஸர்வ்' செய்த அங்கத்தினர்களுக்கெல்லாம் ஹாலில் 'மேடைக்கு முன்னால் போட்டிருந்த நாற்காலிகளில் சீட்டு எழுதிக் கட்டி ரிஸர்வ் செய்து விட்டுப் போய்விட்டார் காரியதரிசி. எந்தெந்த நபரின் இடம் எவ்வெவ்விடத்தில் இருக்கிறது என்ற ஒரு பட்டியல் தயாரிப்பது பெரிய கஷ்டமாய்ப் போய்விட்டது ராமமூர்த்திக்கு. இரண்டு மணி நேரம் அவகாசம் எடுத்துக்கொண்டு அந்த லிஸ்டைத் தயார் செய்தான் அவன். அப்படி இருந்தும் இந்திராணியின் இடம் தவறி விழுந்து விட்டது. ஆண்களுக்கு நடுவில் அவள் உட்கார வேண்டிய நிர்ப்பந்தம் வந்து விட்டது.

முதல்நாள் மாலை இந்திராணி கச்சேரிக்கு வந்தாள். சற்று முன்னதாகவே வந்துவிட்டாள். வழக்கத்திற்கு மாறாகவே தடபுடலாக 'டிரஸ்' செய்து கொண்டு வந்திருந்தாள். வலது கையில் ஒரு டஜன் சிவப்பு வளையலுக்கு மத்தியில் ஐந்தாறு தங்க வளையல்கள் மின்னிக் கொண்டிருந்தன. காதில் வைரத்தோடுகூட வைரத் தொங்கட்டான் ஊசலாடிக் கொண்டிருந்தது. கட்டுப் பூவும் தலையுமாய் அவள் ஹாலுக்குள் பிரவேசித்தபோது அங்கு அமர்ந்திருந்தவர்கள் அத்தனைபேர் கண்களும் அவள் பக்கம் திரும்பின.

ராமமூர்த்தி 'சட்'டென்று எழுந்திருந்து அவள் டிக்கெட்டைக் கேட்டு, அவளுடைய இடத்தைச் சுட்டிக் காட்டினான்.

"தாங்க்யூ" என்று ஆங்கிலத்தில் வந்தனம் தெரிவித்துவிட்டு, முகத்திலே புன்னகை தவழ ஒயிலாக நடந்து போய்த் தன்னுடைய இடத்திலே அமர்ந்தாள். அந்தச் சமயத்தில் அவள் பக்கத்திலிருந்த நாற்காலிகள் எல்லாம் காலியாக இருந்தன. நேரம் ஆக ஆகத்தான் 'ரிஸர்வ்' செய்த ஸீட்டுகள் எல்லாம் நிரம்ப ஆரம்பித்தன. அன்றைய தினம் பாட்டுக் கச்சேரி. பாடகர் மேடை ஏறி வர்ணம் பாடிக்கொண்டிருந்தார். அப்போது கட்டையும் குட்டையுமாக, பருத்த ஆசாமி ஒருவர் இந்திராணியின் நாற்காலியைத் தாண்டிக் கொண்டு போய் அவள் அமர்ந்திருக்கும் நாற்காலிக்குப் பக்கத்து நாற்காலியில் அமர்ந்தார்.

அவர் அமர்ந்தவுடனேயே இந்திராணிக்கு அங்கு உட்கார அருவருப்பாக இருந்தது. அவருடைய முகத்தை இரண்டொரு தடவை பார்த்தபோது பயந்தே விட்டாள். அவருடைய அடர்த்தியான

மீசைதான் அவனுடைய பயத்திற்குக் காரணமாக இருக்க வேண்டும். இதோடு கூட பக்கத்திலுள்ளவர்களை அப்படியே உறிஞ்சிவிடுபவரைப் போல அவர் பொடி வேறு போட்டுக்கொண்டிருந்தார். மேலும் ஹாலே அதிர்ந்து விடும்படியாக அடிக்கடி தும்மிக் கொண்டிருந்தார்.

இவற்றையெல்லாம் வெகு பொறுமையோடு சகித்துக் கொண்டிருந்தாள் இந்திராணி. 'பணத்தையும் ஏராளமாகக் கொடுத்துவிட்டு இப்படிச் சங்கடமாகப் போய்விட்டதே! நிம்மதியாகக் கச்சேரி கேட்க முடியாதுபோல் இருக்கிறதே!' என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்டாள். 'இடத்தை மாற்ற எப்படியாவது ஏற்பாடு செய்துவிட வேண்டும்' என்று தீர்மானித்துக் கொண்டாள். அதனால் தான் போகும்போது ராமமூர்த்தியிடம் தன்னுடைய இடத்தை மாற்றிவிடும்படி கூறிவிட்டுப் போனாள்.

## 3

மறுநாள் நாட்டியக் கச்சேரி. ராமமூர்த்தி ஹாலுக்கு முன்னதாகவே வந்துவிட்டான். இந்திராணியின் இடத்தை எந்த இடத்திற்கு மாற்றலாம் என்று யோசனை செய்து கொண்டிருந்தான்.

"முதலாண்டான் செட்டியாரை தூக்கிவிட்டால், பக்கத்தில் ருத்திரகோடி இருக்கிறார். ரௌத்திராகாரமாகி விடுவார், அசைக்க முடியாது! ஜுபாரைத் தூக்கிவிட்டு அங்கு போட்டாலோ வனஜாட்சி அம்மாள் தொணதொண என்று பேசிக்கொண்டிருப்பாள். இந்திராணியைத் தூக்கி எங்கு போடுவது? இந்துசேகர் பக்கத்தில் போடலாமா? அவனோ மைனர், பாட்டைக் கேட்டுக்கொண்டு சும்மா இருக்க மாட்டான்......" என்று தனக்குள்ளே யோசனை செய்துகொண்டே போனான். ஒன்றும் உருவாகப் புலப்படவில்லை. கடைசியில் காரியதரிசி வந்தவுடன் கேட்டுச் செய்துவிடலாம் என்று அவர் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.



காரியதரிசி வந்தார்; கூடவே, அவரது சரிகை அங்கவஸ்திரமும் 'ஸெண்டு' வாசனையும் வந்தது. ராமமூர்த்தி மெதுவாக இடம் மாற்றுதல் விஷயமாகப் பிரஸ்தாபித்தான்.

"இந்திராணியின் ஸீட் இருக்கிறதே அதோ, அதை மாற்றிவிட வேண்டுமாம். நேற்றே என்னிடம் சொல்லிவிட்டுப் போனார் அந்த அம்மாள்" என்று இழுத்தான் ராமமூர்த்தி.

"அடடா, இதெல்லாம் காதில் போட்டுக் கொள்ளாதே ராமு. இப்படித்தான் கேட்டுக் கொண்டிருப்பார்கள். 'சரி, சரி' என்று தலையைமட்டும் ஆட்டி விடு" என்று கையையும் தலையையும் ஆட்டிக் கொண்டு சொன்னார் காரியதரிசி. பிறகு அவசரமாக டெலிபோனில் யாரோ கூப்பிட்டதினால் போய்விட்டார்.

ராமமூர்த்தி காரியதரிசியின்மேல் பழியைப் போட்டுவிடலாம் என்று இந்திராணியின் இடத்தை மாற்றாமல் சும்மா இருந்துவிட்டான்.

நாழிகை ஆகிக்கொண்டு இருந்தது. ஒவ்வொருவராக வந்து கொண்டிருந்தனர்.

இந்திராணி வந்தாள். இன்று வேறு விதமாகத் தன்னை அலங்காரம் செய்து கொண்டிருந்தாள். தலையில் இரட்டைப் பின்னல் போட்டுக் கொண்டிருந்தாள். ஒரு பின்னலுக்கும் இன்னொரு பின்னலுக்கும் இடையில் கனகாம்பரப் பூவினால் தலையில் அணைகட்டினாற்போல் பூச் சூட்டிக்கொண்டிருந்தாள். காதில் தோடும் தொங்கட்டானும் இல்லை. வைரத்தோடு மட்டும் இருந்தது. இடது கரத்தில் சிறிய கைக் கடிகாரமும் வலது கையில் ஒரேயொரு வைர வளை மட்டும் இருந்தது. வழக்கப்படி பிளாஸ்டிக் பை வலக் கையில் தொங்கிக் கொண்டிருந்தது.

ராமமூர்த்தியைப் பார்த்தவுடன் லேசாகச் சிரித்துக் கொண்டாள். "என்னுடைய இடத்தை மாற்றி விட்டீர்களா? என் தம்பி பாலு வந்திருக்கிறான். ஐந்து வயதுப் பையன்தான். மடியில் வேண்டுமானால் வைத்துக்கொள்கிறேன்" என்று சொல்லி அருகில் இருந்த பொடிப் பையனை அணைத்துக் கொண்டாள்.

ராமமூர்த்திக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. "மூன்று வயதுக் குழந்தைக்கு மேல் இருந்தால் பூராக் கட்டணம் ஆயிற்றே! அப்படியிருந்தும் 'கொசுறு' ஒன்றை அழைத்துக் கொண்டு வந்திருக்கிறீர்களே. மேலும் உங்கள் இடத்தை வேறு மாற்றவில்லை. அங்கேயே போய்

உட்காருங்கள், பார்க்கலாம்" என்று சொன்னான்.

இந்திராணிக்குக் கோபம் கோபமாக வந்தது. "காரியதரிசியிடம் பேசிக் கொள்கிறேன்" என்று கூறி விட்டுப் பழைய இடத்திலேயே வந்து உட்கார்ந்தாள். அன்று உட்காரும்போது தனது பக்கத்து சீட்டில் உட்காரும் தடித்த ஆசாமி யார், அவர் பெயர் என்ன? என்பதைத் தெரிந்து கொள்வதற்காக, அந்த இடத்தில் பெயர் எழுதி இருக்கும் சீட்டைப் பார்த்தாள். 'ராஜாராம்' என்று எழுதி யிருந்தது. 'பெயருக்கும் உருவத்திற்கும் என்ன பொருத்தம்!' என்று நினைத்துக்கொண்டு தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டாள். பிறகு தன் தம்பி பாலுவை அந்தக் காலி நாற்காலியில் உட்கார வைத்தாள்.



அன்றைய தினம் கச்சேரி ஆரம்பித்து ஒரு மணி நேரம் கழித்துத்தான் அந்த இடத்திற்குரிய ஆசாமி வந்தார். அது வரையில் பாலு அந்த இடத்தில் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தான்.

ஆனால் மூன்றிய தினம் இந்திராணி பார்த்ததுபோல் முரட்டு மனிதர் வரவில்லை. ஒரு வாலிபன் வந்தான். வெள்ளை நிஜாரும், மஞ்சள் நிற ஸில்க் ஷர்ட்டும், சிவப்பு 'டை'யும் அணிந்து காலில் அணிந்துள்ள பூட்ஸ் 'கிர்கிர்' என்று சப்தமிட கம்பீரமாகத் தன்னிடத்திற்கு வந்தான். அவன் நோக்கி வந்த இடம் காலியாக இல்லை. அந்த இடத்தில் பாலு தூங்கிக் கொண்டிருந்தான்!

இந்திராணி அவனைப் பார்த்தவுடன் பரபரப்பு அடைந்து விட்டாள். முகம் 'குப்'பென்று சிவந்து விட்டது!

"இந்த இடம் உங்களுடையதா? குழந்தையை எடுத்துக் கொள்ளட்டுமா?" என்றான்.

"வேண்டாம், வேண்டாம்! நான் போய் விடுகிறேன்" என்று பதில் சொல்லிவிட்டு அவன் போய் விட்டான்.

அவன் போகும் வரையில் இந்திராணி அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். 'என்ன தாராள மனசு' என்று அவளை யறியாமலேயே அவள் வாய் முணுமுணுத்தது.

அன்றைய நிகழ்ச்சி முடிந்தவுடன் இந்திராணி வெளியில் போகும்போது ராமமூர்த்தி சொன்னான். "நல்ல வேளை, இன்று அந்தத் தடித்த மனிதர் வரவில்லை. அவர் டிக்கெட்டில் வேறு ஒருவர் வந்திருந்தார்" என்று.

இந்திராணி பதில் ஒன்றும் பேசவே இல்லை. அரைத் தூக்கத்திலிருந்த தன் தம்பியைக் கையைப் பிடித்துக் கரகர வென்று இழுத்துச் சென்று வெளியில் தனக்காகக் காத்திருந்த காரில் போய் ஏறிக் கொண்டாள்.

அன்றைய தினம் நடனம் ரொம்பவும் நன்றாக இருந்தது. இந்திராணியின் மனம் அதில் லயித்துப் போய் இருந்தது. அவள் தம்பி பாலு விடாப் பிடியாய்ப் பிடிவாதம் செய்து அவளோடுகூட வந்தான். ஆனால் அவன் நடனத்தைப் பார்க்கவே இல்லை. முக்கால்வாசி நேரமும் தூங்கிக் கொண்டிருந்தான் — அதுவும் வேறொருவர் உட்காரவேண்டிய நாற்காலியில்! அந்த வாலிபன் இங்கிதம் தெரிந்தவன். உட்காராமல் போய் விட்டான். மீசைக்காரராய் இருந்தால் இடத்தை விட்டிருக்க மாட்டார்; ஆக்ரமித்துக் கொண்டிருப்பார். அப்பொழுது எவ்வளவு சங்கடம்! மடியில் அல்லவோ சுமக்க வேண்டி யிருந்திருக்கும். நிம்மதியாகக் கச்சேரியை ரஸித்திருக்க முடியாது என்று பலபடியாக யோசனை செய்து கொண்டு போனாள் இந்திராணி. அப்பொழுதெல்லாம் அந்த வாலிபனின் களையான முகம், அவள் மனத்திரையில்

மின்னல் வேகத்தில் தோன்றித் தோன்றி மறைந்து கொண்டிருந்தது. இனி பாலு எவ்வளவு பிடிவாதம் பிடித்தாலும் கச்சேரிக்கு அழைத்து வரக்கூடாது என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டாள்.

மறு நாள் இந்திராணி சபா ஹாலுக்குள் நுழைந்தபோது அவளுடைய இடத்திற்கு அடுத்தாற்போல் இருந்த இடத்தில் முன்னதாக வந்து அந்த வாலிபன் உட்கார்ந்து கொண்டிருந்தான். இந்திராணி பேசாமல் போய்த் தன்னுடைய இடத்தில் உட்கார்ந்து கொண்டாள்.

கச்சேரி ஆரம்பமாயிற்று. பாடகர் பாடிக் கொண்டிருந்தார். இந்திராணி தனது தொடையில் மெதுவாகத் தாளம் போட்டுக் கொண்டிருந்தாள். இடை இடையே பக்கத்தில் அமர்ந்திருந்த வாலிபனைக் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"இப்போது பாடிக் கொண்டிருக்கிறாரே இது என்ன ராகம்?" என்று மெதுவாகக் கேட்டான் அவன்.

இந்திராணி ஒரு தடவை அவனைத் திரும்பிப் பார்த்தாள். பிறகு "ஆனந்த பைரவி ராகம்" என்று சொன்னாள்.

"அடடா! இன்று மட்டும் அந்தக் குழந்தையை அழைத்து வந்திருந்தால் இந்த ராகத்திற்கும் பாட்டுக்கும் நன்றாகத் தூங்கப் பண்ணி யிருக்கலாம்" என்று சொல்லிச் சிரித்தான்.

இந்திராணிக்குப் பதில் பேசத் தெரிய வில்லை; 'களீ'ரென்று சிரித்து விட்டாள்.

## 4

இப்படி ஆரம்பமான இருவர்கள் நட்பும் வளர்ந்து கொண்டு போயிற்று. அந்த வாலிபன் தன்னுடைய பெயர் ராஜாராம் என்றும், முதல் நாள் வந்தவர் தன்னுடைய தந்தை என்றும் சொன்னான். "தயவுசெய்து உங்கள் தந்தையை மட்டும் இனி கச்சேரிக்கு வரச் சொல்லாதீர்கள்" என்று வெகு தாழ்மையாகக் கேட்டுக் கொண்டாள் இந்திராணி.

'முதல் நாள் இடத்தை மாற்றச் சொன்னேனே. அவர் மாற்றாமல் இருந்தது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று' என்று இப்போது நினைத்துக் கொண்டாள்.

பத்துநாள் நடந்த கலைவிழாக்கச்சேரிகள் முடிவடையும் தறுவாயில் இருந்தன. ராஜாராமும் இந்திராணியும் ஒருவரை யொருவர் விட்டுப் பிரிய வேண்டுமே என்று வெகுவாகத் தவித்துக் கொண்டிருந்தனர். நாலைந்து நாள் பழக்கத்தில் ஒருவர் குணம் ஒருவருக்கு நன்கு தெரிந்து விட்ட படியாலும் இருவர் உள்ளங்களும் ஒன்று பட்டுப் போயிருந்ததாலும் அவர்களிடையே பிரிவு ஏற்படும்போது மனது கஷ்டப் பட்டதில் வியப்பொன்றுமில்லை யல்லவா?

முதல் நாளே இருவரும், கடைசி நாள் மேற்கொண்டு செய்ய வேண்டியவைகளைத் தீர்மானம் செய்து கொள்ளலாம் என்று தீர்மானித்திருந்தனர். ஆகவே, அந்த நாளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். கடைசி நாள் வந்தது. ஆனால் எதிர்பார்த்தபடி இந்திராணி கடைசி நாள் சபாவுக்கு வர முடியவில்லை. அவளுடைய தந்தை அன்று நடக்க விருக்கும் புல்லாங்குழல் கச்சேரிக்குத் தான் போகப் போவதாக இந்திராணியின் டிக்கெட்டை எடுத்துக் கொண்டு போய் விட்டார். வெகு 'மேக்'காக டிரஸ் செய்து கொண்டவள் தன் பையில் டிக்கெட்டு இல்லாததைப் பார்த்துத் திடுக்கிட்டாள். தாயாரை விசாரித்தபோது அவள், "உங்கள் அப்பா எடுத்துக்கொண்டு போயிருக்கார். தினமும் தான் நீ போய்க்கொண் டிருக்கயே, இன்னிக்கு அவர்தான் போகட்டுமே" என்று சொல்லிவிட்டாள்.

இந்திராணியின் இருதயமே நின்று விடும் போலிருந்தது. திக்பிரமை அடைந்தவள்போல் காணப்பட்டாள். தன்னுடைய திட்டமெல்லாம் தவிடுபொடி ஆகிவிட்டதே என்று நினைத்துக் கொண்டாள். "ராஜாராம் தன்னைப்பற்றி என்ன நினைத்துக் கொள்வார். நான் போட்டது, பேசினது எல்லாம் வேஷமென்றுதானே எண்ணிக் கொள்வார்" என்று நினைத்த போது அவள் உள்ளம் வெதும்பிற்று. கண்ணீர் மாலை மாலையாக வெளிவந்து கன்னங்களை நனைத்தன.

ஏறக்குறைய இந்தப் போராட்டத்தில் தான் ஈடுபட்டிருந்தான் ராஜாராமனும்.



பிரயாணி:— டிரைவர் ஐயா, வண்டியைக் கொஞ்சம் வேகமாய் ஓட்டக் கூடாதா?

டிராம் டிரைவர்:—ஏன் இறங்கி நடந்து போய்விடுங்களேன்.

பிரயாணி :—வேண்டாம். அவ்வளவு அவசரம் ஒன்றும் இல்லை!

அவனும் அன்றையக் கச்சேரிக்குப் போக முடியாமல் போய் விட்டது. அன்று காலை அவனுடைய தந்தை ஊரிலிருந்து திரும்பி வந்து விட்டார். வந்தவர் ராஜாராமனிடமிருந்து முதல் காரியமாக டிக்கெட்டைப் பெற்றுக்கொண்டு சபாவுக்கு வந்து விட்டார்.

ராஜாராமனுக்குத் தன்னுடைய தந்தையின் செய்கைமீது ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. 'கிழம் கட்டைகளுக்கு எல்லாம் கச்சேரி என்ன வேண்டிக் கிடக்கிறது?' என்று மனமாரச் சபித்தான். 'தனியாக டிக்கெட்டு வாங்கிச் சென்றாலும் இந்திராணியின் பக்கத்தில் உட்கார முடியாது. அவளுடைய விலாசத்தைக்கூடக் கேட்டு வாங்கிக் கொள்ளாமல் இருந்து விட்டோமே' என்று மண்டையில் அடித்துக் கொண்டான் ராஜாராமன்.

## 5

ராஜாராமனுடைய தந்தை உமாபதி முதலியார் 'ஜம்'மென்று தம் இடத்தில் வந்து உட்கார்ந்து கொண்டார். அவர் பக்கத்து இடத்தில் சற்று நேரம் கழித்து இந்திராணியின் தந்தை ராஜாபாதர் முதலியார் வந்தார்.

உமாபதி, ராஜாபாதரைப் பார்த்து விட்டார். "என்ன ராஜாபாதர் சௌக்கியமா? பார்த்து ரொம்ப நாளாயிற்று. நீதான் கச்சேரிக்குத் தினம் வந்து கொண்டிருக்கிறாயா?" என்று கேட்டார்.

"அடடா, உமாபதியா! சௌக்கியமா? இன்னிக்குத்தான் வரேன். நீ தினமும் வருகிறாயா?"

"இல்லை, என் மகன் வந்துகொண்டிருக்கிறான். நீ தினம் வராபோல் இருக்கு. முதல் நாள்தான் உன் பெண்ணைப் பார்த்தேன்" என்றார்.

"நான் வருவதில்லை. என் மூத்த பெண் வந்து கொண்டிருக்கா. அவள் பேரிலே தான் 'ரிஸர்வ்' ஆகியிருக்கு."

"இந்த இடமும் என் பையன் பேரிலே தான் 'ரிஸர்வ்' ஆகியிருக்கு."

இதற்குள் பக்கத்தில் 'உஸ் உஸ்' என்று சத்தம் கேட்கவே பழைய நண்பர்கள் இருவரும் பேச்சை நிறுத்திக் கொண்டு விட்டார்கள். கச்சேரி முடியும் வரை அவர்கள் பேசவே இல்லை. முடிந்தவுடன் ஒருவருக்கொருவர் வந்தனம் தெரிவித்துவிட்டுப் போய்விட்டார்கள்.

உமாபதி தன் பங்களாவை அடைந்தவுடன் ராஜாராமன் தன் முகத்தை 'உர்' என்று வைத்துக் கொண்டிருந்தான். தன் தந்தையைப் பார்த்தவுடன், "என்ன அப்பா, கச்சேரி ரொம்ப நன்றாக இருந்ததா? உங்க வலக்கை பக்கத்தில் யார் உட்கார்ந்திருந்தா?" என்று கேட்டான்.

"திருட்டுப் பயலே, எல்லாம் தெரியும்! விஷயம் அவ்வளவு தூரத்துக்கு முற்றி விட்டதா? முதலிலே இதுக்கு ஏதாவது ஒரு வழி பண்ணுகிறேன்" என்று சொல்லிக் கனைத்துக் கொண்டார்.

மறுநாள் விடிந்தவுடன் காரைப் போட்டுக் கொண்டு ராஜாபாதர் வீட்டுக்குக் கிளம்பினார். கார் மயிலாப்பூர் 'லஸ்' முனைக்கு வந்தது. லஸ் முனையில் நிற்கும் போலீஸ்காரரின் கை சமிக்ஞைக்காக எதிரில் காத்திருந்த காரிலிருந்து கை தட்டும் சத்தம் கேட்டது. அதில் ராஜாபாதர் உட்கார்ந்திருந்தார். பிறகு இரு 'கார்'களும் ஜோடியாக ராஜாபாதர் வீட்டை அடைந்தன.

"என்ன உமாபதி! நான் உன்னைத் தேடிக் கொண்டு கிளம்பினால் நீ என்னைத் தேடிக் கொண்டு வருகிறாயே?" என்றார் ராஜாபாதர்.

"இரண்டு பேர் கிளம்பின காரியமும் ஒன்றாக இருக்கும் என்று நினைக்கிறேன். நேற்றுக் கச்சேரியிலிருந்து வந்தவுடனே என்மகன் உயிரை எடுத்து விட்டான்."

"இவளும் அப்படித்தான். கச்சேரிக்கு யார் வந்தா? என் பக்கத்திலே யாரு உட்கார்ந்தா? இப்படித் தொணத் தொணன்னு கேள்விகளைக் கேட்டு உயிரை வாங்கிட்டா. கடைசியிலேதான் விஷயம் புரிந்தது."

"ஏதோ நாம் தூரமாக இருந்தவர்கள் இப்போது நெருங்கி விட்டோம்" என்று சாந்தமாகச் சொல்லிச் சிரித்துக் கொண்டார் உமாபதி.

## 6

நல்ல சுபயோக சுபவேளையில் ராஜாராமனுக்கும் இந்திராணிக்கும் கல்யாணம் விமரிசையாக நடந்தேறியது.

முதல் அழைப்பிதழ், சங்கீத விழாவின் போது சபாவில் இடங்கள் எல்லாம் 'ரிஸர்வ்' செய்து அதைக் கடைசி வரை மாற்றாமல் இருந்த திருவாளர் ராமமூர்த்திக்குப் போயிற்று.

கல்யாணத்திற்கு அவன் வந்திருந்த போது முதல் தாம்பூலம் அவனுக்குத் தான் வழங்கப்பட்டது. கல்யாணம் முடிந்து அவன் விடைபெற்றுக் கொண்ட போது ராஜாராமனும் இந்திராணியும் வாசல் வரை வந்து வழி அனுப்பினார்கள்.

"அடுத்த வருஷம் கவலையில்லை. 'இந்திராணி ராஜாராம்' என்று சேர்ந்தாற் போல் இரண்டு ஸீட் ரிஸர்வ் செய்து விடுகிறேன்" என்று சொல்லிச் சிரித்துக் கொண்டான் ராமமூர்த்தி.

அவனுடைய தூய அன்பில் மெய் மறந்து போனார்கள் இந்திராணியும் ராஜாராமும்.




## 7. வனஜாவின் வேதனை

அரண்மனையின் ஆடம்பர வாழ்வும் ராஜ உபசாரங்களும் ராஜகுமாரனுக்குக் கொஞ்சங்கூட மன நிம்மதியைத் தரவில்லை. அந்தத் தேசத்து அரசன் அவனிடம் உயிரையே வைத்திருந்தான். தான் முன் பிறப்பில் செய்த தவப்பயன் காரணமாகவே இந்த ராஜகுமாரன் கப்பல் விபத்தில் சிக்கி, தன் நாட்டில் வந்து கரையேறினான் என்று மனப்பூர்வமாக நம்பிக்கை வைத்திருந்தான். தன் ஒரே குமாரி வனஜாவை அவனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்து விட்டால், பிள்ளையில்லை என்னும் தன் நீண்ட நாள் மனக் குறையும் நீங்கிவிடும். ராஜ்யத்தை அவனிடமே ஒப்புவித்து விடலாம் அல்லவா?

அரசனின் பெண் வனஜாவும் ராஜகுமாரனிடம் ரொம்பப் பிரேமை கொண்டு விட்டாள். கம்பீரமான அவனது தோற்றமும் களை பொருந்திய அவன் முகமும் அவள் மனசில் நிரந்தரமாக இடம் பெற்று விட்டன.

வனஜா சதா ராஜகுமாரனோடு இருக்க விரும்பினாள். நந்தவனத்திலும், நதிக்கரையிலும், மனசுக்கு மிதமிஞ்சிய உற்சாகத்தைத் தரும் சமுத்திரக் கரையிலும் அவனோடு அவள் உல்லாசமாக உலாவி வந்தாள்.

ராஜகுமாரனுக்கு வனஜாவைப் பார்க்கும்போது மிகவும் பரிதாபமாக இருந்தது. அவளும் இணையற்ற அழகிதான். அவளுடைய விசாலமான நயனங்களிலும் கவர்ச்சி இருந்தது. அவனை அப்படியே விழுங்கி விடுகிறவள் மாதிரிதான் அவளும் பார்த்தாள். ஆனால் நடுக்கடலில் அவனைக் காப்பாற்றிக் கரை சேர்த்த திவ்ய ரூப சுந்தரியின் பார்வைக்கு இவ்வளவும் கொஞ்சமும் இணையாக மாட்டா என்றே அவனுக்குத் தோன்றியது.

ஒரு சில நிமிஷங்கள்தான் அவனால் நடுக்கடலில் அன்றைக்கு அவளைப் பார்க்க முடிந்தது. அப்புறம்தான் அந்தப் பாழாய்ப்போன நினைவு தப்பித் தொலைந்து போய் விட்டதே! பிறரிடம் சொல்லக்கூட முடியாமல் ஒரு கனவு மாதிரி அல்லவா அந்தச் சம்பவம் ஆகி விட்டது!

அரசன், எப்படியாவது இந்த ராஜகுமாரனைத் தன் மாப்பிள்ளையாக்கிக் கொண்டு விட வேண்டும் என்னும் ஆசையில், "இளவரசே, நீங்கள் இப்படிச் சதா காலமும் பித்துப் பிடித்தாற்போல அந்த மாயப் பெண்ணைப் பற்றியே நினைத்துக் கொண்டிருப்பது கொஞ்சங்கூடச் சரியில்லை. உங்களை நடுக் கடலில் காப்பாற்றிய அந்தப் பெண் மாயவித்தையில் தேர்ந்த ஒரு மோகினியாயிருக்கலாம். இல்லாவிட்டால் அந்தக் கொடிய புயல்வீசும் சமயம் கடலில் வந்து ஒரு சாதாரணப் பெண்ணால் காப்பாற்ற முடியுமா? இதை நீங்கள் நம்பலாமா? உங்களுக்கு என்ன குறைச்சல்! அப்பா தேடி வைத்திருக்கும் அருமையான

ராஜ்யம் கடலுக்கு அப்பால் இருக்கிறது. இங்கேயோ என் அருமைப் பெண் வனஜா உங்கள் அன்புக்காகத் தவங் கிடக்கிறாள், என் ராஜ்யமும் உங்களுடையதுதான்!" என்று எத்தனையோ தடவை சொல்லி விட்டான்.

ராஜகுமாரன் எப்படியும் வனஜாவை மணந்துகொள்ளுவான் என்ற நம்பிக்கை ராஜாவுக்குப் பரிபூரணமாக இருந்தது. அதே மாதிரி ராஜகுமாரனுக்கும் கடலில் தன்னைக் காப்பாற்றிய பெண்ணைக் கண்டு பிடித்து விடலாம் என்ற நம்பிக்கை மனசில் இருக்கத்தான் செய்தது. எதைக் கொண்டு அவன் மனசில் இந்த நம்பிக்கை திடமாக இருந்தது என்று அவனுக்கே தெரியவில்லை.

அரசகுமாரி வனஜாவும் ராஜகுமாரனும் வழக்கம் போல் உலாவச் சென்றார்கள். வனஜாவின் இயற்கையான அழகு அன்றைக்கு இன்னும் பலவிதமான செயற்கை அலங்காரங்களினால் பிரமாதமாக விளங்கியது.

'ஜல் ஜல்' என்று ஆபரணங்கள் குலுங்க அன்ன நடை நடந்து சென்ற வனஜாவின் பக்கத்தில் ராஜகுமாரன் ஏக்கத்தோடு போய்க் கொண்டிருந்தான்; கண்ணைப் பறிக்கும் பட்டாடை அணிந்திருந்த வனஜாவின் முகத்தில் புன்னகை தவழ்ந்தது. அவள் தலையில் விதம் விதமான வர்ணங்களில் இருந்த மலர்க் கதம்பம் கூட 'கம்' மென்று வாசனை வீசி ராஜகுமாரனைப் பார்த்துப் புன்னகை புரிந்தது. கரு கருவென்று அழகாக இருந்த அவளது பின்னல் இங்கும் அங்கும் அசைந்து பள பளவென்று மாலை வெய்யிலில் மின்னியது. அந்தப் பொன்னிற வெய்யிலில் அவள் நடந்து சென்ற காட்சி, பல வித வர்ண மலர்கள் பூத்துக் குலுங்கும் பூங்கொடியொன்று நகர்ந்து செல்லுவது போல் இருந்தது.

இதை யெல்லாம் பார்த்து ராஜகுமாரன் மனப் பூர்வமாக அநுபவித்ததாகத் தெரியவில்லை.

"இளவரசரே, எதையோ நினைத்துக் கொண்டு வாய் திறவாமல் மௌனமாக வருகிறீர்களே! உங்கள் கூடவே வரும் என் நினைவு உங்களுக்கு இல்லவே இல்லையா?" என்று கிளி மொழியில் கேட்டாள் வனஜா.

"வனஜா, அது என்ன அப்படிக் கேட்கிறாய்? நீ தானே வெளியே போய் வருவோம் என்று அழைத்தாய்? நீ அழைக்கா விட்டால் நான் தனியாக இங்கே யெல்லாம் ஏன் வரப்போகிறேன்? நீ என்னோடு வருவதை எப்படி நான் மறந்து போக முடியும்? அப்படியே அதை நான் மறந்தாலும், உன் பாதங்களில் அணிந்திருக்கும் பாதசரத்தின் ஒலியும், புதுப் புடவையின் சலசலப்பும், உன் கூந்தலை அலங்கரிக்கும் மலரின் மணமும், குயில் போன்ற உன் குரலும் எனக்கு உன்னை நினைவூட்டிக் கொண்டேயிருக்கின்றன!" என்று ராஜகுமாரன் சிரித்துக் கொண்டே சொன்னான்.

ராஜகுமாரி வனஜா 'கல கல' வென்று சிரித்தாள்.

"வாய் திறவாமல் வருகிறீர்களே! உங்கள் ஊர் ஞாபகம் வந்துவிட்டதா? உங்கள் அப்பா, அம்மா ஞாபகம் வந்து விட்டதா?" என்று அடுக்கினாள் வனஜா.

"அதெல்லாம் இல்லை. எனக்கு என் நாட்டைப் பற்றிய மறதி எப்பொழுதும் வந்ததில்லை. என் அம்மா, அப்பா இவர்களிட மெல்லாம் எவ்வளவோ அன்பு வைத்திருந்தாலும், அவர்களை நினைத்து ஏங்குவதற்கு நான் என்ன சின்னக் குழந்தையா?" என்று கேட்டு விட்டு ராஜகுமாரன் சிரித்தான்.

அந்தப் பதில் வனஜாவுக்குத் திருப்தி தருவதாயில்லை. அப்புறம் அவள் அவனோடு பேசவில்லை. இருவரும் மௌனமாக அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

அன்று இரவு முழுவதும் வனஜாவுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை.





குழந்தை:—ஏன், அப்பா! நீ அம்மாவைக் கல்யாணம் பண்ணிக் கொண்ட காரணம் என்ன?

தகப்பனார் (கோபத்துடன்):—என் பைத்தியக்காரத்தனத்தினால்தான்!

குழந்தை:—அம்மாவும் அதே காரணம்தான் சொல்லுகிறாள். ஈசுவரா, போயும் போயும் இரண்டு பைத்தியங்களுக்கா நான் பிறந்தேன்!

புரண்டு புரண்டு படுத்தாள். ராஜகுமாரன் அவளோடு சிரித்துக் கொண்டு ஆசையோடு பழகாததுதான் அவள் மன வேதனைக்குக் காரணம். தான் எவ்வளவோ ஆசையோடு பழகியும் அவன் மட்டும் அந்த மாயப் பெண்ணை மனசில் வைத்துக் கொண்டு ஏங்குவது அவளுக்குப் பிடிக்கவில்லை.

வனஜாவின் சிந்தனை என்னவோ முடிவு பெறவில்லை. ஆனால் அதற்குள் இராப்பொழுது முடிவு பெற்று விட்டது. பொழுது விடிந்துவிட்டது என்பதற்கு அறிகுறியாக ராஜ கிரகங்களில் மங்கள வாத்தியங்கள் பத்து நிமிஷத்துக்கு ஒரு தடவையாக மூன்று தடவைகள் முழங்குவது வழக்கம்.

அதன்படி மங்கள வாத்தியங்கள் அன்றும் முழங்கின. ஒரு தடவை, இரண்டு தடவை ஆயின. மூன்றாவது தடவை மங்கள வாத்தியங்கள் முழங்கின போதுதான் வனஜா சிந்தனையிலிருந்து விடுபட்டு இந்த உலகத்துக்கு வந்தாள். உடனே அவசரம் அவசரமாக ராஜகுமாரனின் அறைக்குச் சென்றாள். என்ன ஆச்சரியம்! அவனை அங்கே காணவில்லை.

உடனே வனஜா வெறி பிடித்தவள் மாதிரி சமுத்திரக் கரைக்குச் சென்றாள். அங்கே கண்ணுக் கெட்டிய தூரம்வரையில் ராஜகுமாரனைக் காணவில்லை. ஆனால் அதற்காக வனஜா திரும்பிப் போய்விட வில்லை. இங்கும் அங்கும் ராஜகுமாரனைத் தேடினாள்.

கரையோரமாக இருந்த ஓர் ஓடத்தின் அருகே ராஜகுமாரன் உட்கார்ந்து நீலக்கடலையே பார்த்துக் கொண்டிருந்தான்.

சூரியன் உதயமாகிக் கொண்டிருந்த படியால் காலை வேளையில் அந்தக் காட்சி பிரமாதமாக இருந்தது.

வனஜா வந்ததை ராஜகுமாரன் கவனிக்கவேயில்லை. அவன் என்ன செய்கிறான் என்று கவனிப்பதற்காக, அவனுக்குத் தெரியாமல் அவனைப் பார்க்கும்படியான இடத்தில் அந்த ஓடத்துக்குப் பின்னால் மறைந்து கொண்டாள் வனஜா.

கடலையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த ராஜகுமாரனுக்கு அலைகளுக்கு மத்தியில் சுந்தரியின் முகம் மிதந்து வருவது நன்றாய்த் தெரிந்தது.

ராஜகுமாரன் இன்னும் கவனித்துப் பார்த்தான். நீலக் கடலில் எழும்பிய வெண்மையான அலைகளுக்கு மத்தியில் தாமரை போன்ற செந்நிற முகம் ராஜகுமாரனையே உற்றுப் பார்ப்பது தெரிந்தது. அவளுடைய கருமையான கூந்தல் கடல் அலையில் நெளிந்து அழகாகத் தோன்றியது.

ராஜகுமாரன் கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தான். சில நிமிஷங்களுக்கெல்லாம் கடலில் கரைக்கு அருகேயிருந்த ஒரு பாறைமீது சுந்தரி தோன்றினாள். தோன்றும் போதே மானிடப் பெண்ணாகிவிட்டாள்.

"ஹா சுந்தரி!" என்று அலறிக் கொண்டு ராஜகுமாரன் சமுத்திரத்தில் பாய்ந்து நீந்தி ஓரே தாவாகத் தாவி அந்தப் பாறையை அடைந்தான்; சுந்தரியின் பக்கத்தில் உட்கார்ந்து அவளை அப்படியே விழுங்கிவிடுபவன் மாதிரி பார்த்தான்.

சுந்தரி ஆச்சரியம் அடைந்தாள்.

"இளவரசே, என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்! நான் யார் என்று உங்களுக்குத் தெரியுமா? இதற்குமுன் எப்போதாவது என்னைப் பார்த்திருக்கிறீர்களா?" என்று இனிமையான குரலில் கேட்டாள்.

ராஜகுமாரனுக்கு அவள் பேச்சு ஏதோ சங்கீதத்தைக் கேட்டதுபோலிருந்தது. அவன் புத்தி தடுமாறியது.

“சுந்தரி, உன்னைத் தெரியாமல் என்ன? சில மாதங்களாக உன்னைப் பற்றிய நினைவுதான்! உன்னை எத்தனை தடவை இந்த நீலக்கடலில் தேடியிருப்பேன்!” என்று ராஜகுமாரன் தன்னை மறந்து சொன்னான்.

சுந்தரிக்கு ஆச்சரியம் தாங்கவில்லை.

“என் பெயர் உங்களுக்கு எப்படித் தெரியும்?” என்று கேட்டாள்.

“உன் பெயர் எனக்குத் தெரிய வேண்டுமா? நீ நடுக்கடலில் தோன்றி என்னைக் காப்பாற்றிக் கரைக்குக் கொண்டு வந்து சேர்த்துவிட்டு உடனே மறைந்து விட்டாய். அப்புறம் உன்னை ஓயாமல் இந்த அலைகடலில் தேடினேன்! உன் சுந்தர உருவத்தைக் கண்டது முதல் உனக்குச் சுந்தரி என்ற பெயர்தான் தகும் என்று தீர்மானித்து விட்டேன். அதனால்தான் அப்படிக் கூப்பிட்டேன்! சரி, அது இருக்கட்டும். அன்று புயலின் கொடுமையிலிருந்து என்னைக் காப்பாற்றி விட்டு ஏன் உடனே மறைந்து விட்டாய்? நீ யார்? நாக கன்னிகையா? தேவலோகப் பெண்ணா? அப்ஸரஸா?”

சுந்தரி சிரித்துக் கொண்டே, “அதெல்லாம் இல்லை. நான் உண்மையிலேயே ஒரு கடல் கன்னிதான். உங்களிடம் வருவதற்காக ஒரு முனிவரின் வரப் பிரசாதத்தினால் ஒரு மானிடப் பெண்ணின் உருவத்தை அடைந்தேன்” என்று சொல்லிவிட்டு, திகைப்புடன் நாற்புறமும் பார்த்தாள்.

“ஏன்? சுந்தரி! இங்கே யாரும் இல்லை. பயப்படாமல் நீ பேசலாம்!” என்றான் ராஜகுமாரன்.

வனஜா காதுகளை மிகவும் கூர்மையாக வைத்துக் கொண்டு அவர்கள் பேசுவதைக் கேட்கலானாள்.

“அன்பரே, எனக்கு மனித உருவத்தைத் தந்த முனிவர் நான் வெகுநேரம் கடல் நீரில் இருக்கக் கூடாது என்றும், அப்படி இருந்தால் மீண்டும் கடல் கன்னிகையாகிப் பேசும் சக்தியை இழந்து விடுவேன் என்றும் சொன்னார்” என்றாள் சுந்தரி.

“வா, அரண்மனைக்குப் போய்ப் பேசலாம்!” என்று கூறி ராஜகுமாரன் தந்தத்திலே கடைந்து எடுத்தமாதிரி இருந்த அவளது அழகிய கையைப் பிடித்துக் கொண்டு அவளை இமை கொட்டாமல் பார்த்தான்.

“என்ன பார்க்கிறீர்கள்?” என்றாள் சுந்தரி.

“நீ என் கண்முன் தோன்றியிருப்பது உண்மைதானா? அல்லது கற்பனையா? என்று சந்தேகமாய்ப் போய் விட்டது. அதனால்தான்......!”

“.........என் கையைப் பிடித்துக் கொண்டு விழுங்கிவிடுகிறவர் மாதிரி பார்த்தீர்களாக்கும்!” என்று கூறி விட்டுச் சிரித்தாள் சுந்தரி. ராஜகுமாரனும் சிரித்தான்.

மறு நிமிஷம் அந்தப் பாறையிலிருந்து இறங்கிச் சுந்தரியும் ராஜகுமாரனும் கை கோத்துக் கொண்டு கரையை அடைந்தனர். அவர்களுக்கு இருந்த சந்தோஷத்தில் அந்தப் பாறைக்கு மறுபுறம் ஓடத்துக்குப் பின் பக்கம் மறைந்து கொண்டு இத்தனை நேரமும் அவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த அரசகுமாரி வனஜாவைப் பார்க்கவில்லை. அவளும் ஆத்திரத்தோடும், பொறாமையோடும் அவர்களுக்குத் தெரியாமல் அரண்மனையை அடைந்தாள். (தொடரும்)



# இன்று உங்கள் பற்களை நீங்கள் மக்ளீன் செய்தீர்களா?



"இதோ! என் பற்கள் அழகாயில்லையா? நான் எப்போதும் மக்ளீன்ஸையே உபயோகிக்கிறேன். அது அத்தனை சுத்தமானது, ஆனந்தமானது."

வாயைச் சுத்திகரித்து மூச்சின் நாற்றத்தை போக்குகிறது.

உமிழ்நீர் பெருகுவதைத் தடுத்து ஈறுகளைப் பாதுகாக்கிறது.

மேலே உள்ள கறைகளை அகற்றி பற்களுக்கு வெண்மை தருகிறது.

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை ஒரு ட்யூப் வாங்குங்கள். அது எவ்வளவு சுத்தமாக இருக்கிறது என்பதைப் பாருங்கள். அச்சடித்த அழகான ட்யூப், 'பளபளக்கும் வெள்ளை மூடி எல்லாம் வெகு ஜோர். இவ்வளவு ஜாக்கிரதையாக உங்கள் மக்ளீன்ஸைப் பாதுகாப்பதுதான் சரி; ஏனெனில் நவீன விஞ்ஞான சாதனைப் பிரகாரம் அது பரிசுத்தமாகவும் பலனளிப்பதாகவும் இருக்க வேண்டும் அல்லவா?

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குங்கள்!**



# படித்துப் பாருங்கள்!

## ராமகிருஷ்ண உபநிஷதம்

மலரில் தேன் இருக்கிறது என்று தெரியும். ஆனால் வண்டு அந்தத் தேனை உறிஞ்சிக் கூட்டில் வைத்து நமக்குக் கொடுத்தால்தான் அந்தத் தேன் எவ்வளவு ருசியாக இருக்கிறது, எவ்வளவு இனிப்பாக இருக்கிறது என்று உணர்கிறோம்.

அது போல் வங்காளத்தில் பிறந்த ஞானி ராமகிருஷ்ணர் அருளிய மொழிகள் உபநிஷத வாக்கியங்களுக்குச் சமானமானவை; அவர் மொழிந்த கதைகள் உபநிஷதக் கதைகளுக்கு ஒப்பானவை என்பதைக் கேள்விப் பட்டிருக்கிறோம். ஆனால் அவற்றை ராஜாஜி கூறும் போதுதான் உபநிஷத வேகமும் தொனியும் தமிழர்களுக்கு ஏற்படுகிறது.

"பகவான் ராமகிருஷ்ணருடைய உபதேசங்கள் வெறும் சாஸ்திரம் அன்று. தம் அநுபவத்தில் சரி என்று கண்டு அனைவரும் அநுஷ்டிக்கத் தகுந்த வழி என்று அவர் ஆராய்ந்து அறிந்து சொல்லும் உண்மை. தேவி பக்கத்திலே நிற்கிறாள், அவளைச் சரண்புகு, எல்லாம் அடைவாய், உன்னைப் பக்கத்திலிருந்து காப்பாள்—என்று அவர் அநுபவத்தில் கண்டு நமக்கும் சொல்கிறார். அதை உணர்ந்து நாம் நடந்து கொண்டால் நாமும் உய்வோம்; நாடும் செழிக்கும்" என்கிறார் ராஜாஜி.

ராஜாஜியின் இத்தகைய வேகம் செறிந்த கட்டுரைகளை 'கல்கி'யில் வாரந்தோறும் நேயர்கள் படித்து வந்தார்கள். அக் கட்டுரைகள் இப்போது அழகிய புத்தக வடிவில் வெளி வந்திருக்கிறது.

பிரசுரம் :—ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை ; விலை ரூ. 1—4—0.

## Present Day Painters of India

இன்று நம் நாடு எத்தனையோ துறைகளில் வெகு வேகமாக முன்னேறி வருகிறது. அப்படிச் சித்திரக் கலையிலும் எவ்வளவு தூரம் முன்னேறி யிருக்கிறது என்பது மேற்கண்ட புஸ்தகத்தைப் பார்க்கும்போது தெரிகிறது. எத்தனைக் கலைஞர்கள்! எத்தனை பாணிகள்!

ஒரு காலத்தில் நமது நாட்டில் சித்திரக்காரர்கள், ஒரு பெண்ணின் நகத்தை மாத்திரம் வைத்துக் கொண்டு அந்தப் பெண்ணின் முழு உருவத்தையுமே எழுதி விடுவார்களாம். அவ்வளவு கற்பனை மிகுந்தவர்கள் என்று அதிசயோக்தியாகக் கூறுவார்கள். 'அத்தகைய முன்னோர்களின் வழி வந்தவர்கள்தான் இவர்கள்' என்று இதிலுள்ள ஒவ்வொரு சித்திரமும், அந்தச் சித்திரக்காரர்களைப் பற்றிக் கூறுகிறது.

இந்தப் புஸ்தகத்தில் சுமார் 30 சித்திரங்கள் இருக்கின்றன, இவற்றில் பல மூவர்ணப் படங்கள். காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரிவரையிலும், பம்பாயிலிருந்து கல்கத்தா வரையிலும் உள்ள தலைசிறந்த தற்காலக் கலைஞர்கள் அத்தனை பேருடைய சித்திரங்களும், அவர்களை அறிமுகப் படுத்தும் வாழ்க்கைக் குறிப்புகளும் கலை விமர்சனமும் இதில் இருக்கின்றன. இந்த அரிய பணியைச் செய்திருக்கும் அன்பர் ஜி. வெங்கடாசலத்தைப் பாராட்டுகிறோம்.

[பிரசுரம்: கதான்க பிரகரம், சாந்தாராம் தெரு, பம்பாய்—8: ]

## சைனாவின் கதை

மேல் நாடுகளில் நாகரிகம் தோன்றுவதற்குப் பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்பே நாகரிகத்தின் மிக உச்ச நிலையை அடைந்திருந்த தேசங்கள் பாரத தேசமும் சைனாவும்தான். மூவாயிரத்தைந்நூறு ஆண்டுகளுக்கு முன்பே, அதாவது தற்போது நாகரிமடைந்த நாடுகள் என்று சொல்லப்படும் ஐரோப்பியர் கற்களையும் உளிகளையும் வைத்துச் சமிக்ஞை பாஷையில் பேசிக் கொண்டிருந்த காலத்தில் சீனர்கள் தங்கள் கருத்துக்களை எழுத்து வடிவத்தில் பொறித்து வைக்கத் தொடங்கி விட்டனர். அச்சு இயந்திரங்கள் செய்து புஸ்தகங்கள் அச்சடிக்கத் தொடங்கி விட்டனர். இன்னும் பல துறைகளில் முன்னேறி யிருந்தனர். அத்தகைய சீன நாட்டின் மகத்தான சரித்திரத்தைச் சிறுவர்களும் விரும்பிப் படிக்கும் வகையில் எழுதி, பக்கந்தோறும் வர்ணப் படங்களுடன் வெளியிட்டிருக்கின்றனர்.

## மிங்கின் கதை

சைனாவில் உடல் வெண்மையாகவும் கால்கள் கறுப்பாகவும் உள்ள 'பூனைக் கரடி' என்று ஒரு மிருகம் இருக்கிறது. அந்தப் பூனைக் கரடியின் குட்டி ஒன்று இங்கிலாந்து மிருகக் 'காட்சிச் சாலைக்குக் கொண்டுபோகப் பட்டது. அந்த வரலாற்றை, பூனைக்கரடி பிறந்ததிலிருந்து தொடங்கி ஒரு கதையாக இப்புத்தகத்தில் கூறப்பட்டிருக்கிறது. கதை வெகு சுவாரஸ்யமாக இருக்கிறது. பக்கத்துக்குப் பக்கம் வர்ணப்படங்களுடன் வெளியிடப் பட்டிருக்கிறது.

'மின்சாரத்தின் விந்தை' 'அற்புத உலகம்' முதலிய விஞ்ஞான சம்பந்த விஷயங்களைத் தமிழில் எழுதியவரும், பல குழந்தைப் புத்தகங்களை எழுதியவருமான ஸ்ரீ பெ. நா. அப்புஸ்வாமி அய்யர் மேலே குறிப்பிட்ட இரண்டு நூல்களையும் தமிழில் மொழி பெயர்த்திருக்கிறார். தமிழ் நாட்டுக் குழந்தைக் குலத்துக்கு ஸ்ரீ பெ. நா. அவர்கள் செய்து வரும் தொண்டைப் பெரிதும் பாராட்டுகிறோம்.



மிங் என்னும் பூனைக்கரடி.

பிரசுரம் : ஆக்ஸ்போர்ட் யூனிவர்ஸிட்டி பிரஸ் காரியாலயத்தார், சென்னை ; விலை: ஒவ்வொரு புஸ்தகமும் அணா 12.




## ஜனநாயகமும் மந்திரி சபையும்

"பிரிட்டிஷ் அரசாங்கம் போய் நமது குடியரசு உதயமாகியிருந்தும் இன்னும் பழைய அதிகார வர்க்கம் போகவில்லையே! இன்னும் ஒவ்வொரு ஜில்லாவிலும் கலெக்டர், தாசில்தார் முதலியவர்கள் இருந்து கொண்டு அதிகாரம் செலுத்துகிறார்களே! இன்னும் அந்தப் போலீஸ் இலாக்கா இருக்கிறதே! இது என்ன ஜனநாயகம்! இது என்ன மக்கள் ஆட்சி!" என்று அங்கலாய்ப்பவர்கள் எத்தனையோ பேர் இன்றும் நம்மிடையே யிருக்கிறார்கள்.

இவர்களுடைய குறைகளையும் சந்தேகங்களையும் மாராமத்து இலாக்கா மந்திரி கனம் பக்தவத்சலம் இந் நூலில் தெள்ளத் தெளிந்த தமிழில் நிவர்த்தி செய்திருக்கிறார்.

"ஜனநாயக முறையிலுள்ள கலெக்டர் எதேச்சாதிகாரியல்ல! அரசாங்கத்தின் போக்குக் கிணங்க மக்களுக்குத் தொண்டு புரிய வேண்டும். சில சமயங்களில் தந்திக் கம்பியில் நடப்பது போல் நடக்க வேண்டியிருக்கும். ஆனால், கீழே விழாமல் நடந்து செல்லும் ஆற்றல் கலெக்டருக்கு வேண்டும். ஜில்லாவின் எல்லா விவகாரங்களையும் ஜனநாயக அரசாங்கத்தின் சார்பாகக் கவனித்து மக்களுக்குத் திருப்திகரமான சேவை புரிய வேண்டிய கலெக்டருக்கு விசேஷ சாமர்த்தியமும் அக்கறையும் உத்ஸாகமும் வேண்டும்......"

இவ்வாறு பழைய அதிகார வர்க்கத்துக்கும், புதிய ஜனநாயக அரசாங்கத்துக்கும் உள்ள வித்தியாசத்தையும் ஜனநாயக மந்திரி சபையின் கீழ் அரசாங்க இயந்திரம் எப்படி வேலை செய்கிறது என்பதையும் பல உதாரணங்களின் மூலம் விளக்கியிருக்கிறார்.

[பிரசுரம்: தமிழ்ப் பண்ணை, தியாகராய நகர். சென்னை—17. விலை: ரூ. 1.]

## Shankar's Weekly-Children's Number

டில்லியிலிருக்கும் 'ஷங்கர்ஸ் வீக்லி' காரியாலயத்தார் உலகக் குழந்தைகள் சித்திரப் போட்டியும் கட்டுரைப் போட்டியும் நடத்தினார்கள். அமெரிக்கா, பின்லாந்து, ருஷ்யா, கிரீஸ், பெல்ஜியம், துருக்கி, ஆஸ்திரேலியா முதலிய நாடுகளிலிருந்தெல்லாம் பல சிறுவர்கள் இந்தப் போட்டியில் கலந்து கொண்டு பரிசுகள் பெற்றிருக்கிறார்கள். இந்தப் போட்டியில் பரிசு பெற்ற குழந்தைகளின் சித்திரங்களும் கட்டுரைகளும் தொகுத்து ஒரு மலராக வெளியிட்டிருக்கிறார்கள். சித்திரங்களும் கட்டுரைகளும் பார்க்கவும் படிக்கவும் வெகு ரஸமாக இருக்கின்றன. இந்த மலருக்குப் பிரதம மந்திரி நேரு ஒரு அருமையான கட்டுரை உதவியிருக்கிறார். நமது ராஜாஜி ஒரு அழகான பாப்பா மலர்க் கதை எழுதியிருக்கிறார். இன்னும் பல பிரமுகர்கள் நல்ல விஷயதானம் புரிந்திருக்கின்றனர். ஷங்கர்ஸ் வீக்லி காரியாலயத்தார், அகில உலகக் குழந்தைகளின் கலை யுணர்ச்சியை உற்சாக மூட்டிப் பாராட்டும் இம் முயற்சியைக் கண்டு மகிழ்கிறோம்.

# குழந்தையின் மனம்

**எஸ். வைத்தியநாதன்**

இரவு மணி ஒன்பதவைா இருக்கும். பள்ளிக் கூடப் பாடங்களைப் படித்துக் கொண்டிருந்தாள் விமலா. அவளுக்குத் தூக்கம் கண்ணைச் சுற்றியது. புஸ்தகங்களை மூடி வைத்து விட்டுப் படுத்துக் கொள்ளலாம் என்ற எண்ணத்துடன் பாயைத் தட்டி விரித்தாள்.

அதே சமயத்தில் வெளியே போய்விட்டுத் திரும்பிய அவளுடைய தகப்பனார் ராகவாச்சாரியார் உள்ளே நுழைந்தார். "ஏ மூதேவி! அதற்குள் என்ன படுக்கை! இன்னும் கொஞ்ச நேரம் படிக்கிறதுக்கு என்ன! இப்படித் தூங்கினால் எந்த வீடு உருப்படும்!" என்று மகள் மீது எரிந்து விழுந்தார். விமலாவுக்குத் துக்கம் நெஞ்சை யடைத்தது. அழுகையே வந்துவிடும் போலிருந்தது; எனினும் கஷ்டப் பட்டுச் சமாளித்துக் கொண்டு மௌனமாக நின்றாள். தந்தையை எதிட்டுப் பார்ப்பதற்கே அவளுக்கு அச்சமா யிருந்தது.

விமலாவின் சித்தி, குழந்தைக்குப் பால் புகட்டிக் கொண்டிருந்தாள் கூடத்தில். கணவரின் சுடு சொற்களைக் கேட்டு விமலாவுக்குப் பரிந்து கொண்டு அவள் கூறினாள்: "எதற்காக அந்தத் தாயில்லாக் குழந்தையை இப்படிக் கரித்துக் கொட்டுகிறீர்கள்! மணி ஒன்பதரைக்கு மேல் ஆகிறது. குழந்தைக்குத் தூக்கம் வராதா? தூக்கம் வருவது ஒரு பிசகா! நீங்கள் கைகாலை யலம்பிக் கொண்டு சாப்பிட வாருங்கள். விமலாவை மிரட்டினது போதும்!" பிறகு, தலை குனிந்தபடி துக்கத்துடன் நின்று கொண்டிருந்த விமலாவைப் பார்த்து, "நீ படுத்துக் கொள் விமலா! இதற்காக வருத்தப்படாதே! உங்கப்பா குணந்தான் தெரிந்த விஷயமாச்சே! எப்போதும் யார் மேலாவது ஆத்திரப் பட்டுக் கொண்டே யிருக்க வேண்டும் அவருக்கு" என்று அவளைச் சமாதானப்படுத்தினாள்.

"க்ஷேமமாம்! 'குழந்தை, குழந்தை' யென்று இடங் கொடுத்துக் கொடுத்துத்தான் விமலாவைக் கெடுக்கிறாய் நீ! நல்ல குழந்தை! அவளுக்கு வயது பதினாலு ஆகிறது என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்" என்று கூறிவிட்டுச் சாப்பிடப் போய் விட்டார் ராகவாச்சாரியார்.

விமலா படுத்துக் கொண்டாள். ஆனால் கண்ணைச் சுழற்றிக் கொண்டு வந்த தூக்கம் எங்கேயோ போய் விட்டது! தகப்பனாரின் சுடு சொற்கள் அவள் தூக்கத்தைக் கலைத்து விட்டன. துக்கம் நெஞ்சை யடைத்தது அவளுக்கு; கண்ணீர் வழிந்து தலையணை தெப்பமாய் நனைந்து விட்டது.

மணி பன்னிரண்டு அடித்து விட்டது. வீட்டிலுள்ளவர்கள் அனைவரும் அயர்ந்த நித்திரையிலாழ்ந்து விட்டனர். அப்போதும் விமலாவுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. தந்தையின் சொல்லம்பு அவள் நெஞ்சில் பாய்ந்து கொடிய புண்ணை உண்டாக்கி யிருந்தது. அவள் விம்மினாள், பெருமூச்செறிந்தாள், கண்ணீர் பெருக்கினாள். ஆயினும் அவள் மனத்தில் சாந்தி ஏற்படவில்லை. மனப் புண்ணின் வலியும் இம்சையும் குறையவில்லை.

இந்த அப்பாதான் எவ்வளவு கடினசித்தம் உள்ளவராக மாறி விட்டார்! சாந்தமே உருவான அவர் இப்படி துர்வாசராக மாறி, தொட்டதற்கெல்லாம் எரிந்து விழ ஆரம்பித்து விட்டாரே! இவ்வளவும் அவர் சித்தியை இளையாளாக மணந்து கொண்ட பிறகுதான்! தன் தாயார் உயிருடன் இருந்த நாட்களில் தன்னிடம் எவ்வளவு வாத்ஸல்யத்தைச் சொரிந்து கொண்டிருந்தார்! கண்ணின் கருமணியாக வல்லவா தன்னைப் போற்றி வந்தார்! ஒரு கடுஞ் சொல் சொல்லி யிருப்பாரா! தினமும் சாயங்காலம் வரும்போது தின்பண்டம் ஏதாவது வாங்கி வராமலிருக்க மாட்டாரே! ஆனால் இப்போது தான் ஏதாவது அவசியமான சாமான் கேட்டால் கூட எரிந்து விழுகிறார்!

இவ்வளவும் இந்தச் சித்தி வந்த பிறகுதான். சித்திதான் அவர் மனத்தைக் கலைத்து விஷமாக்கியிருக்கிறாள். ஆனால் இந்தச் சித்தி ரொம்ப கைக்காரி. தன் மீது உயிரையே வைத்திருக்கிற மாதிரி நடிக்கிறாள்! தேனொழுகப் பேசுகிறாள். அப்பா தன்னை ஏதாவது கடிந்து கொண்டால் கூடத் தனக்குப் பரிந்து கொண்டு பேசுவது போல் நடிக்கிறாள். ஆனால் அவ்வளவும் பாசாங்கு. ஊராருக்கு மெய்ப்பிப்பதற்காகப் போடும் வேஷம் அது. 'கோமளம் ரொம்ப உத்தமி! மூத்தாள் பெண்ணை எவ்வளவு ஆதரவுடன் நடத்துகிறாள் பார்' என்று எல்லோரும் சொல்ல வேண்டுமல்லவா! அதற்காகத்தான் இந்த நாடகம். இவ்வாறு தன்னெதிரிலும் ஊரார் எதிரேயும் நல்லவள் மாதிரி நடந்து கொண்டு அப்பாவுக்குத் தனிமையில் உபதேசம் செய்து அவர் மனதைக் கலைத்துக் கொண்டிருக்கிறாள்!

இவ்வாறு எண்ணி விமலா துயரப் பட்டுக் கொண்டிருந்தாள். இடையே 'நம் அம்மா மாத்திரம் உயிரோடு இருந்தால்!' என்ற எண்ணம் அவள் மனத்தில் எழுந்தது. அதைத் தொடர்ந்து தாயாரின் மரணக் காட்சிகள் அவள் உள்ளத்தில் குமுறித் திரைப்படம்போல் காட்சி யளித்தன.

* * *

ஒரு நாள்—ஆறு வருஷங்களுக்கு முன் ஒரு நாள். அப்போது விமலா தன் தாயாருடன் தன் பாட்டனார் வீட்டுக்கு வந்திருந்தாள்.

அன்று காலையிலிருந்தே கனகவல்லி—விமலாவின் தாய்—முனகிக் கொண்டும் கூச்சலிட்டுக் கொண்டும் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தாள். அம்மா வேதனைப் படுவதைக் கண்டு விமலாவுக்கும்—அழுகை வந்து விட்டது; ஓரேயடியாய் அழுது ரகளை பண்ணி விட்டாள். அவள் பாட்டிதான் அவளைச் சமாதானப் படுத்தினாள். "அசடு மாதிரி அழாதே, விமலா! உனக்குத் தம்பிப் பாப்பா பிறக்கப் போகிறான் இப்போது! அவனை எடுத்து வைச்சுண்டு நீ விளை



யாட்டுக் காட்டலாம்'' என்று கூறி அவளைச் சமாதானப் படுத்தினாள். தம்பிப் பாப்பா பிறக்கப் போவதற்குத் தன் தாயார் எதற்காக அவஸ்தைப்பட வேண்டும் என்று விமலாவுக்குப் புரியவில்லை. தாயை இப்படித் துன்புறுத்திக் கொண்டே பிறக்கப் போகிற அந்தத் 'தம்பிப் பாப்பா' மீது அவளுக்கு எல்லையற்ற கோபம் வந்தது.

சாயங்காலம் ஆயிற்று. தம்பிப் பாப்பா பிறக்கவில்லை. நிமிஷத்துக்கு நிமிஷம் கனகவல்லியின் கதறல் அதிகரித்தது. யாரோ ஒரு டாக்டரைக் கூப்பிட்டுக் கொண்டு வந்தார்கள். ஊரிலேயே பெரிய டாக்டராம் அவர். அவர் வந்து பார்த்துவிட்டுத் தாத்தாவுடன் ஏதோ 'குசு குசு' வென்று ரகசியம் பேசி விட்டுப் போய் விட்டார்.

விமலாவின் தாத்தா, பாட்டியை அழைத்து ''ரொம்பவும் அபாயமான நிலைமை என்று டாக்டர் சொல்லுகிறார். குழந்தை வயிற்றிலேயே இறந்து விட்டதாம். ஆயுதம் போட்டுத்தான் வெளிப்படுத்த வேண்டுமாம். எதற்கும் ராகவனுக்குத் தந்தி கொடுத்து வரவழைத்து விடுவது நலம் என்று சொல்லுகிறார்'' என்று துக்கம் தோய்ந்த குரலில் சொன்னார். பாட்டி ''கனகம் மோசம் செய்து விட்டுப் போகாமலிருக்க வேண்டுமே! பெருமாளே! நீதான் துணையிருக்க வேண்டும்!'' என்று அழுது கொண்டே சொன்னாள்.

விமலாவுக்கு இதெல்லாம் ஒன்றும் அர்த்தமாகவில்லை. அவளுக்குப் புரிந்த ஒரே விஷயம் தன் தந்தைக்குத் தந்தி கொடுத்து வரவழைக்கப் போகிறார்கள். மறுநாள் காலை அவர் வரப் போகிறார் என்ற எண்ணத்தில் குதூகலித்தது அக்குழந்தையின் மனம்!

அன்றிரவு என்ன நடந்தது என்று விமலாவுக்கு ஒன்றும் தெரியாது. அவள் கவலையற்றுத் தூங்கி விட்டாள்.

மறுநாள் காலையில் அவள் கண் விழித்த போது அவள் தந்தை வந்திருந்தார். துயரமே உருவாய் கனகவல்லி இருந்த அறைக்கு வெளியே நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். அவர் உட்கார்ந்திருந்த தோரணையும் அவர் முகத்தில் குடி கொண்டிருந்த சோகமும் விமலாவை அவரிடம் நெருங்குவதற்கே அஞ்சும் படி செய்து விட்டன. அவள் தந்தையே வலுவில் அவளைக் கூப்பிட்டார்; அவள் தயக்கத்துடன் அவர் அருகில் சென்றாள். ''விமலாக் கண்ணு!'' என்று ஏதோ கூற வாயெடுத்தார் ராகவாச்சாரி. ஆனால் அதற்கு மேல் அவரால் ஒன்றும் பேச முடியவில்லை! கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிய விமலாவை அப்படியே தழுவிக் கொண்டார்.

திடீரென்று கனகவல்லியின் தீனக்குரல் கேட்டது: ''அம்மா அவரைக் கூப்பிடேன்.''

ராகவாச்சாரியார் மாமியார் தன்னை வந்து கூப்பிடும் வரை காத்துக் கொண்டிருக்கவில்லை; அறைக்குள் ஓடோடியும் சென்றார் விமலாவையும் அழைத்துக் கொண்டு. கனகவல்லி கண் சொரிந்த நீருடன் ரொம்பவும் ஈனக் குரலில் இக்கித் திணறிக் கொண்டு கணவரைப் பார்த்துக் கூறினாள்:— ''உங்கள் எல்லோரையும் விட்டு விட்டுப் போகிறேன். குழந்தை விமலாவை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள்.'' அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லை; கண்களை மூடிக் கொண்டாள். ராகவாச்சாரி கதறிக் கொண்டே கூறினார்:— ''கனகம்! இப்படியெல்லாம் பேசுகிறாயே! என்னைத் தவிக்க விட்டு நீ போய் விடாதே!'' ஆனால் கனகவல்லியிடமிருந்து பதிலே வரவில்லை; அவள் எல்லையற்ற மோனத்தில் ஆழ்ந்து விட்டாள். அவளுடைய உயிர் கூண்டிலிருந்து பறந்து விட்டது.

எல்லோரும் புலம்பினார்கள், புரண்டார்கள், விமலாவைக் கட்டிக் கொண்டு ''அடி பாவிப் பெண்ணே!'' என்று கதறினார்கள். விமலாவுக்கு இப்போது கொஞ்சம் விஷயம் புரிய ஆரம்பித்திருந்தது. தன் தாயார் இனி திரும்பி எழுந்திருக்க மாட்டாள், முடிவில்லாத் தூக்கத்தில் ஆழ்ந்து விட்டாள் என்பது அவள் பிஞ்சு மனத்தில் பட ஆரம்பித்தது.

கனகவல்லியின் காரியமெல்லாம் முடிவடைந்தன. விமலாவைத் தங்களிடமே விட்டு விட்டுப் போகும்படி ராகவாச்சாரியாரின் மாமனாரும் மாமியாரும் கூறினார்கள். ஆனால் அவர் கனகவல்லியின் பிரிவுத் துயரத்தை, விமலா தம் அருகில் இருந்தால்தான் சிறிதாவது தாங்க முடியும் என்று கூறிப் பிடிவாதமாய் விமலாவைத் தம்முடன் அழைத்துக் கொண்டு வந்து விட்டார்.

பிறகு கொஞ்சநாள் வரை வீட்டில் சமையலுக்கு ஒரு சமையற் காரரை ஏற்பாடு பண்ணிக் கொண்டு காலந் தள்ளினார் ராகவாச்சாரியார். இந்த இடைக் காலத்தில் விமலாவைத் தன் கண்ணின் கருமணி யெனக் கருதி அவளுக்குத் தானே தாயும் தந்தையுமாக இருந்து போஷித்து வந்தார். தனக்குத் தாயில்லை என்ற குறையே அவளுக்குத் தோன்றாதவாறு எல்லையற்ற பிரேமையை அவள்மீது சொரிந்து கருத்துடன் அவளை வளர்த்தார். காலையில் எழுந்து அவளைக் குளிப்பாட்டி, தலை பின்னி விட்டு, தன்னுடன் கூடச் சாப்பிடச் செய்து, பள்ளிக்கூடத்தில் கொண்டு போய் விட்டு விட்டு அப்படியே தாம் ஆபீஸுக்குப் போவார். மத்தியானம் டிபன் சமையற்காரர் பள்ளிக்கூடத்திலேயே கொண்டு போய்க் கொடுத்து விடுவார். சாயங்காலம் ராகவாச்சாரி ஆபீஸிலிருந்து நாலு மணிக்குத்

திரும்பி வருகையில் நேரே பள்ளிக்கூடத்திற்குச் சென்று விமலாவை அழைத்துக் கொண்டு தான் வீடு திரும்புவார். அதற்குமேல் விமலாவையும் அழைத்துக் கொண்டு எங்காவது உலாவுவதற்கோ, சினிமா டிராமாக்களுக்கோ போய் விட்டு இரவு வீடு திரும்புவார். விமலாவைச் சாப்பிடச் செய்து அவளுக்குக் கதை சொல்லித் தூங்கச் செய்து விட்டுத்தான் படுத்துக் கொள்வார்.

ஒரு வருஷங்கழித்து கோமளத்தை இளையாளாக மணந்து கொண்டார் ராகவாச்சாரியார்.

* * *

இதெல்லாம் விமலாவின் மனத்திரையில் ஒருமுறை சுழன்றன. இவ்வளவு பாசத்தைத் தன்மீது வைத்திருந்த தந்தை தன்னைக் கண்டாலே இப்படி எரிந்து விழும் சிடுமூஞ்சியாகி விட்டதற்குக் காரணம் இந்தச் சிற்றன்னை கோமளந்தான் என்ற எண்ணம் அவள் நெஞ்சில் மீண்டும் மீண்டும் மேலோங்கியது. அவள் தான் அப்பாவின் மனசைக் கெடுத்து இப்படித் தன்மீது கடுமையாக இருக்கும்படி செய்து விட்டாள் என்று திடமாக நம்பினாள்.

மேற்படி சிந்தனைகளின் விளைவாக அவர்கள் இருவருடைய கொடுமையிலிருந்தும் தான் விடுதலை யடையும் மார்க்கம் என்ன வென்பதைப் பற்றி யோசிக்கலாரம்பித்தது அவள் மனம். ''தாத்தாவும் பாட்டியும் உயிரோடு இருந்தாலாவது அவர்களிடம் போய்க் கொஞ்ச நாளாவது நிம்மதியாய் இருக்கலாம். நம்முடைய துரதிர்ஷ்டம் அவர்களும் காலமாகி விட்டார்கள். இனிமேல் நமக்குக் கல்யாணமாகிக் கணவன் வீடு போகும்போதுதான் விடுதலை. அது இப்போதைக்கு நடக்கக் கூடிய காரியமல்ல; குறைந்தது இன்னும் மூன்று, நாலு வருஷங்களாவது ஆகும். அதுவரை இவர்களிடத்தில் யார் பிடுங்கல் பட்டுக் கொண்டிருப்பது? சித்தியின் சூழ்ச்சி வலையில் வீழ்ந்து அப்பா பிரயோகிக்கும் கடு மொழிகளையெல்லாம் யார் தாங்குவது? பேசாமல் உயிரையே விட்டுவிட வேண்டியதுதான். அன்றைக்கு ஒரு கதை படித்தோமே! அதில் ஒரு பெண் இப்படித்தானே சிற்றன்னையின் கொடுமை தாங்காமல் தற்கொலை செய்து கொள்கிறாள்! நாமும் அப்படித்தான் செய்து கொள்ள வேண்டும். இன்னும் ஐந்தாறு நாளில் சித்தி ஊருக்குப் போகப்போகிறாள் அல்லவா! அப்போது—அவள் ஊரிலில்லாத சமயம் பார்த்துக்கொல்லைக் கிணற்றில் விழுந்து உயிரை மாய்த்துக் கொண்டு விடுவோம். ஆம், அது ஒன்றுதான் வழி. நம் தாயாரிடம் போய் சேர்ந்தாலொழிய விமோசனமில்லை.'' இவ்வாறு நிர்மாணித்து விட்டாள் அச்சிறுமி.

இரண்டு நாள் கழித்து ஊரிலிருந்து விமலாவின் ஒன்றுவிட்ட அத்தை அவர்கள் வீட்டுக்கு வந்திருந்தாள். அவள் வந்த மூன்றாம் நாள் இரவு கோமளம் ஊருக்குக் கிளம்பிச் சென்றாள். அவளை ரயிலேற்றி விட்டு வருவதற்காக ராகவாச்சாரியார் ஸ்டேஷனுக்குச் சென்றிருந்தார்.

விமலா படுத்துக் கொண்டபடியே எண்ணமிட்டுக் கொண்டிருந்தாள்:—சித்தி ஊருக்குப் போய்விட்டாள். அத்தையும் இரண்டு நாளில் கிளம்பி விடுவாள். பிறகு நம் திட்டத்தை நிறைவேற்றத் தடையொன்றுமில்லை. அப்பா ஆபீஸுக்குப் போயிருக்கும் சமயம் பார்த்து ஒருநாள் தோட்டத்துக் கிணற்றில் குதித்து உயிரை விட்டுவிட வேண்டியதுதான்.

* * *

இவ்வாறு எண்ணிக் கொண்டே விமலா தூங்கிவிட்டாள். மறுபடி அவள் கண் விழித்த போது அப்பாவும் அத்தையும் தாழ்வாரத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் சம்பாஷணையில் தன் பெயர் அடிபடுவதைக் கண்டு உற்றுக் கவனிக்கலானாள். அத்தை சொன்னாள்:—''ராகவா! நீ இப்படி



யிருப்பாய் என்று நான் கனவிலும் கருதவில்லை. நானும் இந்த மூன்று நாளாகக் கவனித்துக் கொண்டிருக்கிறேன். அந்தத் தாயில்லாக் குழந்தை விமலாவை எதற்காக இப்படிக் கரித்துக் கொட்டிக் கொண்டிருக்கிறாய்! மாற்றாந் தாய் மூத்தாள் குழந்தையைக் கொடுமை புரிவாள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் அவளோ பரிந்து கொண்டு வரும்படி நீ அந்தக் குழந்தைமீது தொட்டதற்கெல்லாம் எரிந்து விழுந்து கொண்டிருக்கிறாய்! அவள் கூடத் தேவலை போலிருக்கிறது; நீ அக் குழந்தையை படுத்தும்பாடுதான் எனக்குச் சகிக்கவில்லை. ஒருவேளை நான் வந்திருக்கிறேனே யென்று என் எதிரில் விமலாவைப் பரிவுடன் நடத்துவதாய்க் காட்டுவதற்காக இப்படி வேஷம் போடுகிறளா! உண்மையில் இந்த விஷயம் எனக்கு அர்த்தமாகவே யில்லை. இனி யான் துர்ப்போதனை மிக புத்திமானுனையே உன்னைக் கூடவா கெடுத்து மாற்றிவிட்டது! அல்லது இனியாள் வந்ததும் தானாகவே உன் மனம் மாறி மூத்தாள் பெண்ணின்மீது வெறுப்பு ஏற்பட்டு விட்டதா!''

ராகவாச்சாரியாரின் குரல் கம்மியது. தழதழத்த குரலில் பின்வருமாறு கூறினார்: ''அக்கா என்னை அப்படியா நினைக்கிறாய்! நான் சொந்த மகளையே கொடுமை புரியக்கூடிய கல்நெஞ்சு படைத்தவனில்லை என்பது உனக்கே தெரியும். இருந்தாலும் ஒரு காரணார்த்தமாக விமலாவை ரொம்பவும் கொடுமை புரிகிறாப் போல் நடித்துக் கொண்டிருக்கிறேன்! வெளிக்கு அவள்மீது எரிந்து விழுகிறமாதிரி காண்பித்துக் கொண்டிருக்கிறேன்! எல்லாம் விமலாவின் நன்மையை யுத்தேசித்துத்தான். விவரமாய்க் கூறினால்தான் உனக்குப் புரியும்.

''கோமளம் இருக்கிறாளே, தங்கமான பெண்தான். ஆயினும் அவளிடம் ஒரே ஒரு குறை இருக்கிறது. தான் இந்த வீட்டில் ஆதிபத்யம் வகிக்க வேண்டும், கணவன் தன் சொற்படிதான் நடக்க வேண்டும் என்ற ஒரு அசட்டுத்தனமான எண்ணம் அவளிடம் குடி கொண்டிருக்கிறது. ஆகவே நான் எது சொன்னாலும் அதற்கு ஒரு திருத்தம் கூறி, அதை மாற்றி யமைத்தால்தான் அவளுக்குத் திருப்தி. அவளுடைய இந்தக் குணத்தை இந்த வீட்டில் அவள் அடி யெடுத்து வைத்த சில நாட்களுக்குள்ளேயே கண்டுபிடித்துவிட்டேன். ஆகவே ஒரு காரியத்தை இன்னவிதமாகச் செய்யவேண்டுமென்று எனக்குத் தோன்றினால் அதற்கு நேர் எதிரிடையாக அவளிடம் கூறுவேன். உடனே அவள் அதற்கு ஆட்சேபணை யெழுப்பி, திருத்தங்கள் பிரேரேபித்து நான் சொல்லுவதற்கு மாருக—அதாவது நான் மனத்திற்குள் நினைத்துக் கொண்டிருக்கிறபடியே—அக் காரியத்தைச் செய்ய வேண்டும் என்று வற்புறுத்துவாள். நான் அவளுக்குப் பணிந்து போகிறமாதிரி காட்டிக் கொண்டு நான் நினைத்தபடியே அக்காரியத்தை நிறைவேற்றிக் கொள்ளுவேன். இப்படி நடித்தே என் எண்ணங்கள் அனைத்தையும் நான் ஜயித்துக் கொண்டு வருகிறேன்.

''விமலா விஷயத்திலும் இதே ரீதியில்தான் நான் வேஷம் போட்டுக் கொண்டிருக்கிறேன். நான் அவளிடத்தில் அன்பு மிக்கவனாகக் காட்டிக் கொண்டு விட்டால், கோமளம் இதிலும் தன் சுபாவப்படி எனக்கு விரோதமாக நடக்க ஆரம்பித்து விட்டாள்—விமலாவைக் கொடுமை செய்ய ஆரம்பித்து விட்டாள்—என்ன செய்வது என்ற பயத்தினால்தான் இப்படி விமலா மீது எரிந்து விழுந்து கொண்டு அவளைக் கண்டாலே பிடிக்காதது மாதிரிப் பாசாங்கு பண்ணிக் கொண்டிருக்கிறேன். நான் எதிர் பார்த்தது போலவே கோமளமும் எனக்கெதிராக விமலாவுக்குப் பரிந்து கொண்டு வருகிறாள். அவளிடம் பிரேமையை வர்ஷிக்கிறாள். பெண்ணாய்ப் பிறந்த குழந்தை மற்றொரு பெண்ணின் அன்பிலும் ஆதரவிலும்தானே சரியானபடி வளர முடியும்! என்னதான் நான் அன்பு காட்டினாலும் விமலாவின் தாயாரோ, தாயார் ஸ்தானத்திலுள்ள கோமளமோ அவளை அரவணைத்து ஆளாக்குவது போல் என்னால் செய்ய முடியுமா! அதற்காகத்தான்—கோமளத்தின் அன்பு விமலாவுக்குப் பூரணமாகக் கிடைக்கட்டும் என்பதற்காகவே—அவளைக் கொடுமைப் படுத்துவது போல் பாசாங்கு செய்து கொண்டிருக்கிறேன். உண்மையில் விமலாவுக்குத் தாயார் ஸ்தானத்தில் ஒருத்தி அவசியம் என்ற எண்ணத்தினால்தானே நான் இரண்டாந் தாரமே மணந்து கொண்டேன். அப்படியிருக்க மனப்பூர்வமாக நான் என் பெண்ணையே கொடுமைப் படுத்துவேனு! நீயே சொல் அக்கா!'' இவ்விதம் கூறி முடித்தார்.

''நல்ல கூத்து!'' என்று ஆச்சரியத்துடன் கூறினாள் விமலாவின் அத்தை.

தந்தை கூறியது அவ்வளவையும் கேட்ட விமலாவுக்கு வியப்பும், ஆனந்தமும் ஒருங்கே ஏற்பட்டன. படுக்கையை விட்டு எழுந்திருந்தாள். கண்களில் கண்ணீர் மல்க தந்தையிடம் சென்றாள். அவரும் தம் மகளைக் கட்டி அணைத்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கினார்.

## சுலப வழி!



பையன் :— ஏனப்பா! இந்த இரண்டு அம்மாமியும் வந்து ஏறினவுடன் இந்தப் பஸ்ஸிலே யிருக்கிற எல்லாரும் தூங்க ஆரம்பிச்சுட்டா... ...என்னப்பா நான் கேட்கிறேன் பதில் சொல்லாமல் நீயும் தூங்க ஆரம்பித்து விட்டாயே?

# சியாமளாவின் யோசனை

என். எஸ்.

"சியாமளா, கடிதங்களையெல்லாம் ஒன்றாக எழுதி வைத்துக் கொள்ளாதே என்று எவ்வளவுதரம் சொல்லுவது? ஒருவர் விலாசமிட்ட உறையில் இன்னொருவருக்கு எழுதிய கடிதத்தை அனுப்பி விட்டுத் திண்டாடுவதற்கா?" என்றான் ரகு சிரித்துக் கொண்டே.

"ஏன், திண்டாட்டம் மாத்திரம் தான் வரலாமா, என்ன? நல்லதும் கூட ஏற்படலாம் அல்லவா?" என்றாள்.

இந்த பதிலைச் சொல்லிய சியாமளாவை அவள் மனம் எங்கோ இழுத்துச் சென்றது. ரகுவின் வாயிலாகக் கேட்டறிந்த பல விஷயங்களும், தானாக அறிந்து கொண்ட பல சம்பவங்களும் அவள் மனத்தில் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றலாயின.

* * *

ரகுநாதன் கலாசாலையில், பட்டம் என்னும் லக்ஷ்யத்தை எட்டிப் பிடித்துக் கொண்டிருந்த சமயம். அந்த வருஷம் முடிய வேண்டும். அவ்வளவு தான். பரீக்ஷைகளைக் கண்டு பயப்படுகிறவன் அல்ல ரகு. அதனால் வருஷத்தின் முடிவோடு பட்டமும் கைக்கு வந்துவிடும் என்பதில் அவனுக்குச் சந்தேகமேயில்லை.

ஆனால் பட்டத்தை வாங்கிவிட்டுப் பரீக்ஷைகளுக்கு முழுக்குப் போடுவதாக அவன் இல்லை. இன்னும் பல பரீக்ஷைகளை ஒரு கை பார்ப்பது என்று தான் தீர்மானித்திருந்தான். உயர்ந்த உத்தியோகத்துடன் வாழ்க்கையைத் தொடங்க நினைப்பவர்களுக்கு ஒத்தாசையாக இருக்கும் ஐ. ஏ. எஸ். தான் முதலாவது அவன் தியானத்தில் இருந்து வந்தது.

இந்தப் பரீக்ஷைக்கு எந்த விஷயங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும், எவைகளைப் பற்றித் தெரிந்து கொள்ளவேண்டாம் என்பது அவனுக்குத் தெளிவாக வில்லை. இதனால் அவன் சில விநோத முறைகளை அனுஷ்டித்து வந்தான், தன்னை இந்தப் பரீக்ஷைக்கு லாயக்குள்ளவனாகச் செய்து கொள்ளுவதற்கு.

ஏதாவது ஒரு அறையில் நுழைந்தால், மேலே எவ்வளவு உத்திரங்கள், ஜன்னல்களில் எவ்வளவு கம்பங்கள், ஏறி வந்தது எவ்வளவு படிகள் என்பன போன்ற பல பிறர் பார்த்தாலும் கவனிக்காத விஷயங்களையெல்லாம் அத்துபடி செய்வான். இம்மாதிரிச் செய்வதினால், எதையுமே கூர்ந்து கவனிக்கும் தன்மை விருத்தியாவதாக அவன் அபிப்பிராயம். அகராதியில் தினம் ஒரு பக்கம் வாசிப்பான். பூமி எவ்வளவு வேகத்தில் தன்னைத் தானே சுற்றி வருகிறது, சாதாரணமாக மீனுக்கு எவ்வளவு முதுகெலும்புகள் இருக்கலாம் இந்த மாதிரித் துக்கடாக்களால் மட்டும் ஐ. ஏ. எஸ். ஸைக் கடந்து விடலாம் என்றால் ரகுவை ஒருவரும் மிஞ்ச முடியாது.

ஒரு நாள் கல்லூரி வாசகசாலைப் படிகளை ஏறி முடித்தவுடன், ஏறி வந்தது எவ்வளவு படிகள் என்பதில் சந்தேகம் வந்துவிட்டது அவனுக்கு. திரும்பிப் பார்த்து எண்ணிக் கொண்டே முன்னால் நடந்தான். ஐந்தாறு அடிகள் எடுத்து வைப்பதற்குள்ளாகவே 'தடால்' என்று புஸ்தகங்கள் அவன் மீது மோதிக் கீழே விழும் சத்தம் அவன் கணக்கைப் பிசகும்படி செய்தது. கணக்குப் பிசகினாலும் புஸ்தகங்கள் திடீரென்று மேலே வந்து மோதும் அதிசயத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளுவதற்காகத் திரும்பினான். புஸ்தகங்கள் தானாக வந்து கொண்டிருக்கவில்லை. ஒருவருடைய, அதுவும் ஒரு பெண்மணியின் கைகளின் மீது வந்து கொண்டிருந்த புஸ்தகங்களைத் தான், தான் மோதிக் கீழே தள்ளியிருக்கிறான் என்பதை உணர்ந்தான்.

"மன்னிக்க வேண்டும். கவனிக்கவில்லை" என்றான், தயங்கிக் கொண்டே.

"ஆமாம், பின்புறம் பார்த்துக் கொண்டு முன்னால் நடந்தால் கவனிக்க முடியாது தான்" என்றாள் அந்தப் பெண்.

சாந்தமாக அறிவிக்கப்பட்ட இந்த உண்மையைத் தன் பரீக்ஷைக்கு உபயோகப் படக் கூடிய விஷயங்களில் ஒன்றாக எடுத்துக் கொள்வதா வேண்டாமா என்று அவன் முடிவு செய்வதற்குள், அந்தப் பெண் மேலும் ஏதோ சொல்லுவது காதில் விழுந்தது.

"தவறு உங்கள் பேரில் மட்டுமல்ல, என் பேரிலும் தான். இந்தத் தரையில் எவ்வளவு கட்டங்கள் என்று எண்ணிக் கொண்டே நடந்து வந்ததால் நானும் உங்களைக் கவனிக்கவில்லை" என்றாள்.

இதைக் கேட்டதும் ரகு வியப்பினால் மூர்ச்சை போட்டு விழும் நிலையை அடைந்து விட்டான் என்று தான் சொல்லவேண்டும். ஐ. ஏ. எஸ். விற்கே, தனைக் கட்டங்களை என்னும் தூரத்திற்குப் போக வேண்டும் என்று நினைத்ததில்லை. அப்படியிருக்க, அதைவிடப் பெரிய பரீக்ஷைக்குத்தான் இந்தப் பெண் தயார் செய்து கொண்டிருக்க வேண்டும் என்று எண்ணினான். இந்தச் சந்தேகம் ஏற்பட்டவுடன் தனக்குச் சகஜமாக உள்ள கூச்சத்தைக் கூடப் புறக்கணித்து விட்டு, "எதற்குத் தனைக் கட்டங்களை என்னுகிறீர்கள்?" என்று கேட்டே விட்டான்.

"இல்லை, இந்த வருஷம் என் கலியாணத்தை முடித்துவிட என் அப்பா பிரயத்தனம் செய்தார். இரண்டு மூன்று பிள்ளைகள் பெண் பார்க்க வந்தார்கள். எல்லோரும் ஐ. ஏ. எஸ். பரீக்ஷைக்குத் தயார் செய்து கொண்டிருப்பவர்களாம். எனக்குக் கூர்ந்து கவனிக்கும் தன்மை இருக்கிறதா என்று பரீக்ஷிக்க ஆரம்பித்தார்கள். அவர்கள் கேட்ட கேள்விகளில் ஒன்றிற்காவது என்னால் பதில் சொல்ல முடியவில்லை. இதனால் அப்பாவுக்கு வருத்தம். என் வரையில் அந்தப் பித்துக்களிடமிருந்து தப்பியதில் ரொம்ப சந்தோஷம். இருந்தாலும், அடுத்த வரனும் ஐ. ஏ. எஸ். விற்குப் படிப்பவராக வந்துவிட்டால், அவரை மட்டம் தட்டுவதற்காகத்தான், இப்படியெல்லாம் செய்ய வேண்டியிருக்கிறது" என்றாள்.

அவள் இப்படிச் சொல்லி முடித்ததும், ரகு அவள் முகத்தைக் கூர்ந்து கவனித்தான். ஒருவேளை தன்னைப் பரிகாசம் செய்கிறாளோ என்ற சந்தேகம் அவனுக்கு ஏற்பட்டது. ஆனால் முன்பின் தெரியாத அவள் தன்னை அப்படிப் பரிகாசம் செய்ய வழியில்லை என்று எண்ணம் வந்ததும், அவளை அறியாமலேயே அவளிடம் அவனுக்கு ஒரு அனுதாபம் பிறந்தது. கூடவே ஒரு மகிழ்ச்சியும் ஏற்பட்டது. அவளுக்கு இன்னும் கலியாணம் ஆகவில்லை என்று தெரிந்து கொண்டானல்லவா?



இதற்குப் பிறகு ரகுவிடம் ஏற்பட்ட மாறுதல்களை விவரிப்பதை விட, அவன் நண்பர்களின் ஏகோபித்த அபிப்பிராயத்தை இங்கே சொல்லி விடுவதே மேல். 'அவனுக்குப் பைத்தியம் முற்றிவிட்டது' என்று ஏகமனதாக எல்லோரும் சொன்னார்கள். அதுவும் ஒரு நாள் ரகு அவர்களிடம், இப்பொழுதெல்லாம் பூமி ஒரே வேகத்தில் சுற்றவில்லை; ஒரு கணம் ஐந்நூறு மைல் வேகத்தில் சுற்றுகிறது. இன்னொரு கணம் பட்டென்று நின்று விடுகிறது என்று சொன்ன பிறகு, அவர்கள் தங்களுடைய அபிப்பிராயத்தில் சந்தேகத்திற்கே இடமில்லை என்று சாதித்தார்கள்.

*

சியாமளா என்பதுதான், அவன் சந்தித்த பெண்ணின் பெயர். அவள் இந்த வருஷம்தான் கலாசாலையில் சேர்ந்திருக்கிறாள். இங்கே மாமாவின் வீட்டிலிருந்து கொண்டு படிக்கிறாள். இந்தத் தகவல்களையெல்லாம் ரகு கொஞ்சம் கொஞ்சமாகத் தெரிந்து கொண்டான். ஆனால் சியாமளாவின் அப்பா தன் வழியிலேயே, தன் வீட்டிற்கெதிரிலேயே புதிதாய்க் குடிவந்திருப்பவர் என்று தெரிந்து கொண்டதும் அவனுக்கு உலகம் ஆயிரம் மைல் வேகத்தில் சுற்றுவதாகத்தான் பட்டது. எப்படியாவது சியாமளாவின் அப்பா தன் தகப்பனார் மூலம், தான் ஒருவன் கல்யாண மார்க்கெட்டில் இருப்பதை அறிந்து கொண்டு தன்னையே சியாமளாவிற்கு ஏற்ற வரனாகத் தேர்ந்தெடுக்க மாட்டாரா என்றெல்லாம் அவன் உள்ளம் கற்பனையில் இறங்கியது.

சியாமளாவைச் சந்தித்த நாள் முதல் புஸ்தகங்களின் மீது அவனுக்கிருந்த பற்றுதல் குறைந்து வந்தது. அவளுடன் இரண்டு வார்த்தைகள் பேசி விட்டாலும் அதையே நாள் முழுதும் திரும்பத் திரும்ப எண்ணி மகிழ்வான். அவள் எழுதிய இரண்டு வார்த்தைகளைக் கண்டாலும், அவளையே நேரில் காண்பது போன்ற சந்தோஷம் அவனுக்கு உண்டாகும். எதைச் செய்தாலும், சியாமளாவிற்கு இதனால் ஆனந்தம் ஏற்படுமா என்று எண்ணத் தொடங்கினான்.

சியாமளாவிற்குத் தன்னிடம் பேசுவதிலும் பழகுவதிலும் ஒரு இன்பம் இருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்ட அன்றுதான் உலகம் அப்படியே நின்று விட்டது என்று சாதித்தான். நடுநடுவே, சியாமளாவும் தானும் வாழ்க்கையில் பிரியும்படி நேரிட்டு விட்டால் ... என்பதை எண்ணி நடுங்குவான். அப்படி நேராமலிருக்க எவ்வளவோ வழிகளைக் கண்டு பிடித்து வைத்திருந்தான்.

இந்தச் சமயத்தில் பரீட்சைகள் முடிந்து சியாமளா ஊருக்குக் கிளம்பும் நாள் வந்தது. தானும் அதே ஊருக்கு. அவன் வீட்டிற்கெதிர் வீட்டுக்கே போகப் போகிறோம் என்ற எண்ணம் அவனுக்குச் சொல்லமுடியாத உவகையை அளித்தது. இருவரும் ஒரே நாள் புறப்படுவதாக இருந்தார்கள். அதை ரகுவின் தகப்பனார் கெடுத்து விட்டார். ரகுவுக்கு இன்னும் இரண்டு வாரம் தங்கும்படியான வேலையைக் கொடுத்தார்.

அடுத்த இரண்டு மூன்று நாட்களையும் சியாமளாவின் நினைவிலேயே ரகு கழித்தான். அப்புறம்தான் அவன் அமைதியைக் குலைக்கும்படியான கடிதம் ஒன்று அவன் தகப்பனாரிடமிருந்து வந்தது. அவன் கலியாணத்தை அநேகமாக அவர் முடிவு செய்து விட்டதாகவும், 'பெண் பார்த்தல்' என்ற நாடகங்கூட அவசியமில்லை என்றும் எழுதியிருந்தார் அவன் தகப்பனார்.

ரகு முன் கூட்டியே யோசனை செய்து வைத்திருந்த எந்தத் திட்டமும் அவனுக்குப் பயன்படவில்லை. அவனுடைய தகப்பனார் மிகவும் அன்புடன் அவனை வளர்த்திருந்தார். அதனால் அவரை எதிர்த்து அவருக்கு மனக் கஷ்டத்தை உண்டுபண்ண அவன் மனம் துணியவில்லை.

மறுநாள் சியாமளாவிடமிருந்து வந்த கடிதம் அவனுக்கு ஆறுதலையுண்டாக்கியது. அவன் சொல்லும் யோசனையை ஏற்றுக் கொண்டு, அதன்படி செய்து விட்டால், மற்றவைகளைத் தான் பார்த்துக் கொள்வதாக எழுதி இருந்தாள்.

உடனே இரண்டு கடிதங்கள் எழுதுவதில் முனைந்தான். ஒன்று சியாமளாவுக்கு; இன்னொன்று தன் தகப்பனாருக்கு.

"நானும் நீயும் எப்படியோ சந்தித்தோம். உன்னைப் பார்த்தது முதல் உன் நினைவே என் உள்ளம் பூராவும் நிறைந்திருக்கிறது. வாழ்க்கையில் நாம் இருவரும் ஒன்றாகவே இருப்போம் என்ற ஆதாரமற்ற நம்பிக்கை எப்படியோ என் மனத்தில் இடம் பெற்று விட்டது. ஆனால் இன்று வந்த என் தந்தையின் கடிதம் அந்த நம்பிக்கைக்கு முற்றுப் புள்ளி வைக்கிறது.

"இது வரையிலும் என் நன்மையிலேயே கண்ணும் கருத்துமாயிருந்தவர் என் தகப்பனார். அவர் கடிதத்திலிருந்து, என் கலியாண விஷயம் அநேகமாய் முடிவு செய்து விட்டார் என்று தெரிகிறது. இப்பொழுது அவர் தலை குனியும்படியாகவோ, மனம் நோகும்படியாகவோ, கலியாணத்தை



நாயுடு:- என்ன செட்டியார்வாள்! சோர்ந்தாற் போலிருக்கிறீர்களே?

செட்டியார்:— என் வீட்டுக்காரர் வீட்டைக் காலி செய்து, முதலில் என்னிடம் கொடுத்த போது எப்படியிருந்ததோ அதே நிலையில் வீட்டைத் திருப்பிக் கொடுத்து விட வேண்டும் என்கிறார்.

நாயுடு:— அப்படியே கொடுத்து விடுகிறது தானே?

செட்டியார்:— எப்படி ஐயா முடியும்? ஐயாயிரம் பெருச்சாளி, ஆயிரம் கரப்பான் பூச்சி, இருபதினாயிரம் மூட்டைப்பூச்சி இவற்றையெல்லாம் எப்படி நான் திருப்பிக் கொடுக்கப் போகிறேன்...?

வேண்டாமென்று சொல்ல எனக்கு உரிமை கிடையாது. நான் என்ன செய்வேன்!"

இது சியாமளாவுக்கு எழுதிய கடிதம்.

"தங்களுடைய கடிதம் கிடைத்தது. தங்கள் விருப்பப்படியே நான் நடக்கத் தயாராயிருக்கிறேன். வேலை முடிந்ததும் ஊர் வந்து சேருகிறேன்."

இது தந்தைக்கு எழுதிய கடிதம்.

இக்கடிதங்களை யனுப்பிய ஒரு வாரத்துக்குப் பிறகு, அவன் எதிர்பார்த்த கடிதம் வந்து சேர்ந்தது. அவன் தந்தை எழுதியிருந்தார்; கூடவே ஒரு பத்திரிகையும் வைத்திருந்தார். அதில் 'சிரஞ்சீவி ரகுநாதனுக்கும்—சியாமளாவுக்கும்' என்பதைப் பார்த்த பிறகுதான் அவனுக்கு உயிர் வந்தது. சியாமளாவின் புத்திசாலித்தனத்தை வியந்தான்.

★

கலியாணம் முடிந்த பிறகுதான் சியாமளாவைப் பார்த்துப் பேசச் சந்தர்ப்பம் கிடைத்தது ரகுநாதனுக்கு.

"ஷியாமளா, நீ எவ்வளவு புத்திசாலி, உன் யோசனைப்படியே, அப்பாவுக்கு எழுதிய கடிதத்தை உனக்கும், உனக்கெழுதியதை அப்பாவுக்கும் அனுப்பியதால்தானே, நாம் இன்று இவ்வளவு சந்தோஷமாக இருக்கிறோம்" என்றான் ரகு.

"நல்லவேளை, நான் சொன்ன யோசனைப் படி நீங்கள் செய்யாதிருந்தால்தான் இன்று இப்படி இருக்கிறோம். நான் சொன்னபடி செய்திருந்தால் என்ன நடந்திருக்குமோ யார் கண்டார்கள். உங்களுக்கிருந்த கலக்கத்தில் என் கடிதத்தை எனக்கேதான் அனுப்பியிருந்தீர்கள்."

ரகுவுக்கு மூளை குழம்பியது. ஷியாமளா மேலும் விளக்கிய பிறகுதான் அவனுக்கு இந்தப் புதிர் புரிந்தது.

"நீங்கள் எனக்கு எழுதிய கடிதத்தை உறையிலிருந்து எடுத்ததும் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. உங்கள் தகப்பனாருக்கு எழுதிய கடிதத்தைத்தானே எனக்கு அனுப்பியிருக்கப் போகிறீர்கள் என்ற தைரியத்தில் என் அப்பாவின் எதிரிலேயே கடிதத்தைப் பிரித்தேன். ஆனால் அதில் எனக்கு எழுதிய கடிதமாகவே இருக்க, ஒரு வேளை என் யோசனையை ஏற்றுக் கொள்ளவில்லையோ என்ற பயம் வந்து விட்டது. கடிதத்தைப் படித்து முடிப்பதற்குள் பயம் அழுகையாகவே மாறி விட்டது.

"என் தகப்பனாருக்கு முதலில் ஒன்றும் புரியவில்லை. அவரும் கடிதத்தைப் படித்தார். பிறகு 'யார் இவன்?' என்று கோபமாகக் கேட்டார். நான் உங்களைப் பற்றி விவரித்தேன். இடையில் தங்கள் ஐ. ஏ. எஸ். ஸையும் குறிப்பிட்டு வைத்தேன்.

"அப்பா இதையெல்லாம் கேட்டு விட்டு, உங்கள் கடிதத்துடன் விடுவிடென்று வெளியே போனார். திரும்பி வந்ததும் நம் கலியாண விஷயத்தைப் பற்றிய செய்தியைச் சொன்னார். எப்படி இந்தக் காரியத்தை அப்பா சாதித்தார் என்றால், அதுவும் உங்கள் கடிதத்தின் மகிமைதான். உங்களுடைய தகப்பனாருக்கும் என் தகப்பனாருக்கும் ஏற்கெனவே பரிச்சயம் உண்டு. என்னைப் பற்றி உங்கள் தகப்பனார் அறிந்திருந்தார். ஆனால் நீங்கள் ஒருவர் இருக்கிறீர்கள் என்பதே என் தகப்பனாருக்குத் தெரியாது. என்னைத் தங்கள் குடும்பப் பெண்ணாக வரவேற்க உங்கள் தகப்பனாருக்கு எண்ணமிருந்தாலும், 'தான் எப்படி அந்தப் பேச்சைத் துவக்குவது?' என்ற கூச்சத்துடன் பேசாமலிருந்து விட்டாராம். நீங்கள் அப்பாவின் வார்த்தைக்காக என்னைக் கூடத் தியாகம் செய்யத் தயாராயிருந்ததை அவர் அறிந்ததும், உங்களுடைய சந்தோஷத்துக்காக அவர் கிட்டத்தட்ட நிச்சயித்திருந்த அந்தக் கலியாணத்தையும் நிறுத்திவிட ஒத்துக் கொண்டு நம் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்து விட்டாராம்!" என்றாள் ஷியாமளா.

இதையெல்லாம் கேட்ட ரகுவுக்கு ஒரு உண்மை மிகத் தெளிவாகத் தெரிந்தது.

"ஷியாமளா, தவறு செய்வது சுலபம் என்று எல்லோரும் நினைக்கிறார்கள். அது தான் இல்லை; அதைச் செய்வதும் கஷ்டம்தான்" என்றான் ரகு.

★

"என்ன ஷியாமளா, கல்லாகச் சமைந்து விட்டாய்?" என்று ரகு கேட்பது காதில் விழுந்த பிறகுதான் எதிரிலிருந்த கடிதங்களின் நினைவு ஷியாமளாவுக்கு வந்தது.

## வித்வான் மகன்!



# வட்ட மேஜை

## திருவையாறு தியாக பிரம்மத் திருவிழா

ஸ்ரீ தியாகப் பிரம்ம ஆராதனோத்ஸவ சபாவின் நிர்வாகிகள் அடியில் காணும் சமரசமான ஏற்பாடுகளைச் செய்ய வேணுமாய் ரசிகர்களின் சார்பில் கேட்டுக் கொள்ளுகிறேன்.

1. உற்சவத்தில் கச்சேரி செய்யும் வித்துவான்கள் முக்கியமாய்த் தியாகப் பிரம்மத்தின் கீர்த்தனங்களையே பாட வேண்டும். தவிரவும் ஒருவர் பாடியதைக் கூடிய வரையில் மற்றவர் பாடாதிருக்க வேண்டும்.

2. பல்லவி பாடுவதாயிருந்தால் தியாகப் பிரம்மத்தின் ஸாஹித்யங்களிலிருந்து ஒரு பகுதியை எடுத்துக் கொண்டு பாடலாம். அனுவசியமான நிரவல்களிலும், ஸ்வரக் கற்பனைகளிலும், வாண வேடிக்கை போன்றவைகளிலும் பொழுதைப் போக்கி, கரகோஷம் பெறுவதையே முக்கியமாகக் கருதாமல் ரசிகர்களின் உள்ளத்தைத் தொடும் வகையில் கீர்த்தனங்களைப் பாடி ஸத்குருவுக்குக் கைங்கர்யம் செய்ய வேண்டும்.

3. காலை வேளைகளில் நாம சங்கீர்த்தன பஜனைகளை நடத்தி ஸ்வாமிகளால் இயற்றப்பட்ட "திவ்ய நாம சங்கீர்த்தனங்களை"ப் பிரபலப்படுத்தலாம். இதில் "அமெச்சூர்"களும் பொது ஜனங்களும் தாராளமாய்க் கலந்து கொள்ளலாம்.

4. இரவில் ஹரி கதா காலக்ஷேபங்களை ஏற்படுத்தி பக்தி மார்க்கத்தில் அனைவரும் ஈடுபடும்படி செய்து அந்தக் கலை மறைந்து போகாமல் காக்க வேணும்.

6 சென்னையில் சமீபத்தில் நடந்த அனேக சங்கீத விழாக்களில் பாடிய முன்னணி வித்துவான்களின் கச்சேரிப் பகுதிகளை ரேடியோ மூலம் கேட்டுக் கேட்டுத் திருப்தியடைந்திருக்கும் நிலைமையில் மறுபடி இந்த உற்சவத்திலும் அந்தப் பிரமுகர்களையே 'ரேடியோ ரிலே' சமயங்களில் பாடச் செய்தால் யாருக்கும் திகட்டுவது சகஜந்தானே! ஆகையால் தகுதி வாய்ந்த இளம் வித்வான்களின் பாட்டுக்களை 'ரிலே' சமயங்களில் ஏற்பாடு செய்யக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

6. 1939-ம் வருஷம் வரையில் அதாவது கட்சிகள் ஒன்றுபடுவதற்கு முன் இந்த உற்சவம் ஒன்பது நாட்கள் நடந்தன. அந்த நாளில் சங்கீதத் தொழிலில் இல்லாதவர்களுக்கு அதாவது 'அமெச்சூர்'களுக்கு இந்த உற்சவத்தில் பாடச் சந்தர்ப்பம் அளிக்கப்படவில்லை. ஆனால் அக்காலத்தில் இளம் வித்வான்களுக்கு அதிக சந்தர்ப்பமும் முன்னணி வித்வான்களின் பேராதரவும் சுலபமாய்க் கிடைத்தன. அந்த இளம் புள்ளிகள்தான் இப்போது முன்னணியில் பிரசித்தமாய் விளங்குகிறார்கள் என்பதை யாரும் மறுக்க இயலாது. ஆனால் இந்தக் காலத்தில் நிர்வாகிகள் உற்சவத்தையும் நாலு நாளாகக் குறைத்து 'அமெச்சூர்'களுக்கும் அதிக சந்தர்ப்பங்களைக் கொடுத்து இளம் வித்துவான்களை இருக்கும் இடம் தெரியாமல் அடித்து விடுகிறார்கள்.

அஞ்சல் நேரத்தில் முன்னணி வித்வான்கள் தான் பாட வேண்டுமென்று ரேடியோ அதிகாரிகள் வற்புறுத்துகிறார்கள் என்று சொல்லப்படுமானால் அதில் அர்த்தமேயில்லை. ரேடியோ அஞ்சலுக்காக உற்சவமா! அல்லது உற்சவத்துக்காக ரேடியோ அஞ்சலா!

இந்த விஷயங்களைப் பிரமுகர்கள் நன்றாக ஆலோசித்துச் சமரசமான ஏற்பாட்டைச் செய்வதுடன் உற்சவம் ஒன்பது நாட்கள் நடத்தும் நிலைமை ஏற்படும் வரையில் சங்கீதத் தொழிலில் உள்ளவர்களையே ஆதரிக்குமாறு கோருகிறேன்.

7. மற்றுமோர் முக்கியமான விஷயம்: சமாதி பூஜை நேரத்தில் 10, 20 வித்வான்கள் சேர்ந்தும் சேராமலும் பஞ்சரத்னக் கீர்த்தனைகளைப் பாடுவதும் அதற்கு 7, 8 பிடில், 5, 6 மிருதங்கம், 4, 5 கடம், 3, 5 கஞ்சிரா பக்க வாத்தியங்கள் வாசிக்கப்படுவதும் இதை ரேடியோ மூலம் அஞ்சல் செய்வதும் ஆன இந்தப் பஞ்சரத்னக் கீர்த்தனைப் பிரசாரம் வெறும் சப்த ஜாலமாக இருக்கிறது. முக்கியமான சிலர் ஆளுக்கொரு கீர்த்தனமாக பாவ பூர்வமாய்ப் பாடினால் அதுவே தியாகப் பிரம்மேந்திரருக்கு உகந்த கைங்கர்யமாகும்.

தஞ்சை
3—1—51 எஸ். ரங்கசாமி அய்யங்கார்

○●○

## விலை ஏற்றம்

நமது மாகாணத்தில் 1951 ஜனவரி முதல் தேதியிலிருந்து கிராமங்களில் உணவுப் பொருள்களை ரேஷனில் போடுவதை நிறுத்திவிட்டார்கள். இப்பொழுது கிராமங்களில் உணவுப் பொருள்களின் விலை விஷம் போல் ஏறிக் கொண்டு போகிறது. எங்கள் ஊரில் 1 படி அரிசி ரூ. 1—12—0 ஆகவும் மைலோ 1 படி 1 ரூபாயாகவும் இருங்குச் சோளம் 1 ரூபாய்க்கு ஒன்றரைப் படியாகவும் விற்கப்படுகிறது. ஆகையால் நமது மாகாண சர்க்கார் பற்றாக் குறை உள்ள கிராமங்களில் உடனடியாக நியாய விலைக் கடைகள் திறந்து உணவுப் பொருள் சப்ளை செய்ய ஏற்பாடு செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

பட்டி வீரன்பட்டி
16—1—51 க. பழனிச் சாமி

○●○

## கண்டிராக்டர்கள்

பொது ஜனங்களும் பத்திரிகைக் காரர்களும், கண்டிராக்டர்களை, பிளாக் மார்க்கெட்காரர்கள் இனத்தில் சேர்த்து "மண் அள்ளிப் போடும் கடன்காரக் கும்பல்" என்று கருதுகின்றார்கள். கண்டிராக்ட்காரர்கள் பல இடங்கள் அலைந்து குறைந்த விலையில் சாமான்களைக் கொள்முதல் செய்து சிக்கன முறையில் அவைகளைக் கொண்டு வந்து சேர்க்கும் வியாபாரிகள் ஆவார்கள். அதுமட்டுமல்லாமல் கால விரயமாகாமல் குறித்த காலத்தில் வேலைகளை முடிக்கும் கூலி அதிகாரிகள்

ஆனால் அவர்களுடைய சூழ்நிலை அவர்களைக் கீழான காரியங்களில் ஈடுபடும்படி செய்கின்றது. அதிகாரிகளுக்குச் "செலவு" செய்யாவிடில் கண்டிராக்டர்கள் செய்த வேலை சுத்தமாக இருந்தபோதிலும் குற்றங்கள் கண்டுபிடித்துச் செய்த வேலையைத் திருப்பிச் செய்ய வைத்து விடுவார்கள். இல்லையேல், குறித்த காலத்தில் வேலையைச் செய்து முடிக்காமற் போனால் ஏற்படும் அபராதம் விதிக்கப்படும். அல்லது அளவு எடுப்பது இழுவில் நடைபெறாது. இவைகளை விட முக்கியமான "பில் பாஸ்" செய்வதில் வீண் காலதாமதப் படுத்துவார்கள். கண்டிராக்டர்கள் 'டெண்டர்'ரில் தங்களுடைய தொகை மிகவும் குறைவாகவும் குறிக்க வேண்டும், அதிகாரிகளுக்குச் "செலவும்" செய்ய வேண்டும், தங்களுக்குச் சொற்ப லாபமும் எடுத்துக் கொள்ள வேண்டும். இதனால்தான் அவர்கள் இழிவான காரியங்களைச் செய்ய நேர்கின்றது.

ராமநாதபுரம்
16—1—51

ரா. திருமலை

○●○

## நான் மந்திரியானால்....!

உணவுக்கு அடுத்தபடியாக நமக்கு வேண்டியது உடை. இன்று நம் நாட்டில் துணிக்கு அவ்வளவு பஞ்சம் ஏற்பட்டிருக்கவில்லை. கோடிக் கணக்கில் துணி வாங்குவதற்குச் சக்தி இல்லாமல் உடம்பைப் பாதி மூடியும் மூடாமலும் கந்தைத் துணிகளைக் கட்டிக் கொண்டிருக்கும் வரையில் துணிப் பஞ்சம் ஏற்படாது அல்லவா!

ஆனால் இப்பொழுது நூலுக்குப் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது. பல நகரங்களிலும் கிராமங்களிலும் நெசவுத் தொழில் செய்பவர்கள் பட்டினி ஊர்வலங்கள் நடத்தி வருகிறார்கள்.

உழவுத் தொழிலுக்கு அடுத்தபடியாக சுலபமாகப் பெரும்பாலோர் செய்யக்கூடிய முக்கியமான அவசியமான தொழில் நெசவுத் தொழில். நம் நாட்டில் நெசவுத் தொழில் சரிவர நடந்தால் ஏராளமான குடும்பங்கள் பட்டினியில்லாமல் பிழைத்து விடும்.

நான் மந்திரியானால் நம் நாட்டிலுள்ள நெசவுத் தொழிலாளர்கள் அவ்வளவு பேருக்கும் தேவையான நூல் சப்ளை செய்வேன். அவர்களால் நாட்டுக்கு வேண்டிய பூராத் துணியும் நெய்ய முடியாமற் போனால், பிறகுதான் எவ்வளவு துணி நம் நாட்டுக்கு வேண்டுமோ, அந்த அளவுக்கே மில்கள் நெய்வதற்கு அனுமதிப்பேன்.

மில்களை நூல் நூற்பதற்கு மட்டும் வைத்துக் கொண்டு, துணி நெய்வது பூராவும் தறி வேலை செய்பவர்களிடமே விட்டுவிடுவதன் மூலம், ஓரளவு வேலையில்லாத் திண்டாட்டத்தைச் சமாளிக்கலாம்.

கை நெசவுத் துணிக்கும், மில் துணிக்கும் விலை வித்தியாசம் அதிகம் இல்லை. தவிரவும் கை நெசவுத் துணி அதிகநாள் உழைக்கிறது.

நம் நாட்டிலுள்ள ஜனங்களுக்குத் தேவையான துணி போக, மிச்சமிருந்தால் மட்டுமே வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்ய அனுமதிக்க வேண்டும்.

உணவு உடைக்கு அடுத்தபடியாக, நமக்கு வேண்டியது வீடு. வீடு என்று சொன்னாலே நம் ஜனங்களும் சர்க்காரும், கர்டர்கள், இரும்புக் கம்பிகள், சிமெண்டு மூட்டைகள் தேக்கு தூலங்கள், கண்ணாடிக் கதவுகள், சலவைக் கற்கள் இவைகளைப் பற்றித்தான் நினைக்கிறார்கள். இவைகளுக்கு எங்கே போவது! எவ்வளவு செலவாகும் என்று பயந்து சும்மா இருந்துவிடுகிறார்கள். ஜனங்களும் வீடில்லாமல் தவித்துக் கொண்டேதான் இருக்கிறார்கள்.

நாலைந்து பேர் கொண்ட குடும்பத்துக்கு எவ்வளவு பெரிய வீடு வேண்டும். இதை மண் சுவர் வைத்துக் கட்டினால் என்ன! விழுந்தா போய்விடும்! நாலு பக்கமும் சுவர் எழுப்பி, நாலு பெரிய ஜன்னல்கள், நன்றாகக் காற்றோட்டமும், வெளிச்சமும் வரும்படி அமைத்து விட்டு உள்ளே வருவதற்கும், போவதற்கும் ஒரு கதவு வைத்துக் கட்டினால் போதாதா! தட்டு ஓடோ, விழலோ, தென்னங் கீற்றோ பனை ஓலையோ எதையாவது போட்டுக் கூரையை மூடிக்கொண்டால் போதும்.

நான் 1949 ஆகஸ்டு 15-ந் தேதியிலிருந்து ஒரு ஓலைக் குடிசையில்தான் சுகமாக வசித்து வருகிறேன். அதைக் கட்டுவதற்கு எனக்கு எல்லாமாக நூற்றைம்பது ரூபாய்தான் செலவு ஆயிற்று. நானூறு ஐந்நூறு ரூபாயில் கட்டிக் கொள்வதாயிருந்தால் பெரிதாக நன்றாகக் கட்டிக் கொள்ளலாம். சௌகரியமாகவும் இருக்கலாம்.

குறைந்த சம்பளம் வாங்கும், சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், ரயில்வே உத்தியோகஸ்தர்கள், கம்பெனி, மில் தொழிலாளிகள் போன்றவர்களுக்கு ஐந்நூறு ரூபாய் கடனாகக் கொடுத்து, ஒவ்வொருவருக்கும் ஒரு மனை எங்கெல்லாம் காலியாக இருக்கிறதோ அங்கெல்லாம் கட்டிக் கொள்ள ஏற்பாடு செய்தால் நடுத்தர ஜனங்கள் வீட்டுக்குப் படும் கஷ்டம் ஓடியே போய்விடும். சில பங்களாக்களைச் சுற்றி அனாவசியமாக, நூறு மனைகள் இருநூறு மனைகள் காலியாக இருப்பதை விட்டு வைப்பது எதற்கு! அங்கெல்லாம் வீடுகள் கட்ட வேண்டியதுதான். கொடுத்த கடனை அசலும் வட்டியுமாக மாதம் 10 ரூபாயாக ஐந்து வருஷத்தில் வசூலித்து விடலாம். இதைச் செய்வதில் சர்க்காருக்கு என்ன கஷ்டமிருக்கிறது! கொஞ்சம் யோசனையும், செய்ய வேண்டுமென்ற உணர்ச்சியும்தான் வேண்டும்.

இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள், பாங்குகள், பணக்காரர்கள் இந்த வேலை செய்ய எவ்வளவோ சகாயம் செய்யலாம். சர்க்கார் செய்யச் சொன்னால் அவர்கள் மறுக்க முடியாது. அவர்களுக்குத்தான் அசலும் வட்டியும் ஐந்து வருஷத்திற்குள் கிடைத்து விடுகிறதே, இன்னும் என்ன வேண்டும்!

நம் நாட்டில் லட்சக் கணக்கான வீடுகள் வெகு சீக்கிரத்தில், குறைந்த செலவில் சுலபமாக ஏற்பட்டு விடும்.

ஜனங்களைத் தெருவிலும், ரோட்டிலும், மரத்தடியிலும், சாக்கடையிலும் தூங்கவிடுவது எந்த ஜனநாயக சர்க்காருக்கும் பெருத்த அவமானம் என்று சொல்லவும் வேண்டுமோ!

காட்டுப்பாக்கம்
7—1—51

ஸ்ரீபாத சங்கர்

## மறந்துவிட்டார்!

சென்ற வாரக் கல்கி இதழ் வட்ட மேஜையில் பம்பாய் நண்பர் உற்சாகத்துடன், பார்த்திபன் கனவு நாடக விமர்சனம் எழுதியதைப் படித்தேன். முற்றிலும் உண்மை. உற்சாக அவசரத்தில் முக்கியமாக இரண்டு நடிகர்களைப் பற்றி எழுதுவதற்கு மறந்து விட்டார். நல்ல விருந்தில் எதைச் சாப்பிடுவது, எதை விடுவது என்று திணறுவது சகஜம். அதுவும் கடும் ரேஷன் காலத்தில் நல்ல விருந்தென்றால் கேட்பானேன். அதுபோல் மூன்றரை மணி நேர நாடகத்தில் ஒரே கோலாகலக் காட்சிகளைப் பார்த்த உற்சாகத்தில் எதை எழுதுவது எதை விடுவது!

ஒரே காட்சியில் மட்டும் வீரபத்ர ஆச்சாரியாக நடித்த ஸ்ரீ எஸ். கே. எஸ். ராகவன் நடிப்பு பிரமாதம். அக்காட்சிக்குப் பிறகே நாடகத்தில் விறுவிறுப்பு ஏற்பட்ட தென்றால் மிகையில்லை.

கடைசி அங்கத்தில் சபையோரை கதிகலங்கச் செய்த ஒற்றைக் கைகபால பைரவர் ஸ்ரீ பி. என். மூர்த்தியின் நடிப்பையும், சபையோர் யாரும் மறந்திருக்க முடியாது.

பூனா
13—1—51

வே. ரங்கநாதன்

○●○

## நாடகத் தமிழ்

சென்ற வாரம் பம்பாயில் (31-12-50 ல்) எஸ். ஐ. இ. எஸ். உயர்தரப் பாடசாலைக் கட்டிட நிதிக்காக அதன் பழைய மாணவர்கள் (இப்பொழுது தந்தைமார்களாகவும் பெரிய ஆபீஸர்களாகவும் விளங்குபவர்கள்) "கவியின் கனவு" என்ற நாடகத்தை வெகு விமரிசையாக நடத்திக் காட்டினர். இயற்கையான சம்பாஷணை; முதல் தரமான நடிப்பு; பார்த்தவர்கள் யாவரும் அப்படியே சொக்கி விட்டனர். இந்நூலை எழுதிய எஸ். டி. சுந்தரம் அவர்களைப் போற்றிப் புகழ்ந்தனர்.

இதை டைரக்ட் செய்ததோடு ராஜ குருவாக நடித்த ஸ்ரீ என். பாலகிருஷ்ணனை நண்பர்கள் ஆனந்தத்தினால் கட்டித் தழுவிக் கொண்டு கூத்தாடினர்.

பெண் பாத்திரங்களாகத் தோன்றியவர்களும் மற்ற "துக்கடா" வேஷங்களில் வந்த நடிகர்களும் நன்றாகவே தங்கள் திறமையைக் காட்டினர். சமூக ஊழல்களையும், சாதிச் சண்டைகளையும், குருட்டு நம்பிக்கைகளையும் ஒழிக்கக்கூடிய நாடகங்கள் வெளிவர வேண்டும். உண்மையின் உயர்வு, பெண்மையின் சிறப்பு, நாட்டின் முன்னேற்றம், சமரச உணர்ச்சி, சகோதரத்வம் முதலியன பரிமளிக்கக்கூடிய நாடகங்கள் தோன்ற வேண்டும். ஆண்மை, வீரம், தைரியம், சுதந்திரப் பற்று ஆகிய லட்சியங்களையே வைத்துக் கொண்டு ஜனங்கள் புரிந்து கொள்ளும் ஜீவ பாஷையில் நாடகங்கள் எழுதக் கூடிய நாடக ஆசிரியர்கள் தோன்றுவார்களாக! இப்பொழுதுள்ள பல எழுத்தாளர்கள், தங்கள் கவனத்தை



"என் தாத்தா தமது தொண்ணூறு வயதில், அற்பாயுசில், போய்விட்டார் ஸார்!"

"ஏன் டாக்டர் யாரும் பார்க்கவில்லையா?"

"இல்லை; தாமாகவே இறந்து விட்டார்."

நாடகத் துறையில் செலுத்தி, நாடகத் தமிழையும் வளப்பார்களாக!

பம்பாய்
7—1—51

"காஸ்யபன்"

## ஒரு கோரிக்கை

எங்கள் இஸ்லாமிய மதம் உருவ வழிபாட்டை அடியோடு வெறுப்பதென்பதை எல்லோரும் அறிவர். அதனோடு இந்த மத ஸ்தாபகரான 'முகம்மது நபி' அவர்களது திரு உருவப்படத்தை வைத்து வணங்குவதோ அல்லது அவர்களது உருவப் படமாக ஒன்றை வைத்திருப்பதோ கூடாதென அறிவிக்கப்பட்டிருக்கின்றது. இதனை யொட்டி இதுவரை எவரும் நபியவர்களின் படமாக ஒன்றை வெளியிட்டதில்லை. ஒரு எளிய மனிதனது உருவத்திற்கும் கற்பனைத் திறனுக்கும் அப்பாற்பட்டது பெரியோர்களது உருவமும் சொல்லும் என்பதே இதன் கருத்து. இக்கருத்தினில் எவரும் இது வரை குறுக்கிட்டதில்லை. இதுவரை நபி பெருமானது உருவம் எந்தச் சித்திரத்திலோ, நாடக மேடையிலோ தோன்றியதில்லை.

ஆனால் சென்ற செவ்வாயன்று சென்னை வானொலி நிலையத்தில் நடந்த 'முதல் வெற்றி' என்ற நாடகத்தில் ஒருவரை நபியவர்களைப் போன்று நடிக்கச் செய்தது எங்களது மனதைப் புண்படுத்தி விட்டது. மதச் சார்பற்ற சர்க்கார் என்பதைக் காரணமாகக் கொண்டு இதுவரை எதுவுமே செய்யாது இருந்து விட்டு, இன்று திடீரென்று இவ்வாறு செய்ததின் காரணம் என்னவென்று விளங்கவில்லை. இது வேண்டுமென்றுதான் செய்தார்களா! இல்லையேல் அறியாது செய்தார்களா! அறியாமல் செய்திருந்தால் இனி இவ்வாறு எதுவும் செய்யாது இருப்பார்களா! பண லாபத்தைக் கருதித் தமிழ் சினிமாக்காரர்கள் இந்து மதக் கடவுள்களைத் தாங்கள் நினைத்தவாறெல்லாம் சித்தரிக்கும் நிலை எங்கள் மதத்திற்கும் ஏற்பட எங்களில் எவரும் விரும்பவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

14—1—50

ஒரு முஸ்லிம் தொண்டன்

# வாழத் தெரிந்தவர்கள்

வசு

ஸ்ரீமதி குமுதம் குமாரசாமி, சமையற்காரி தயாரித்து வைத்திருந்த பிற்பகல் சிற்றுண்டியையும் காப்பியையும் சாப்பிட்டு முடித்ததும், வெளியே புறப்படுவதற்காகத் தன்னை அலங்கரித்துக் கொள்வதில் ஈடுபட்டாள். ஆடைகளை மாற்றிக்கொண்டு, தலையை வாரி முடித்து நெற்றிக்குத் திலகமிட்டுக் கொண்டபின் கூடத்திலிருந்த நிலைக் கண்ணாடியின் முன் போய் நின்றுகொண்டு தன்னுடைய அழகை ஒருதரம் பரிசீலனை செய்து பார்த்துத் திருப்தி அடைந்தாள். கையிலிருந்த கைக் கடிகாரத்தைப் பார்த்தாள். மணி நாலடிக்கப் பத்து நிமிஷங்கள் இருந்தன. நேராக சமையலறைக்குப் போய் இரவு சமையலுக்கு வேண்டிய குறிப்புகளைச் சமையற்காரிக்குத் தெரிவித்து விட்டு மாடிக்கு வந்தாள்.

அங்கே அவள் புருஷன் குமாரசாமி அவனுடைய அறையிலிருந்த கட்டிலில் கண்ணை மூடிய வண்ணம் அயர்ந்து படுத்துக் கொண்டிருந்தான். இரண்டு நாளாக ஜுலதோஷம் பிடித்துக் கொண்டிருந்ததால் ஆபீசுக்கு லீவு எழுதிப்போட்டுவிட்டு வீட்டிலேயே ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தான். அன்று பிற்பகல் முதல் ஜுலதோஷத்தோடு அவனுக்குக் காய்ச்சலும் கண்டிருந்தது. மாடிக்கு வந்த குமுதம் தான் வந்த சுவடு தெரியாமல் மெதுவாகக் கீழே இறங்கி வந்துவிட்டாள்.

அன்று குமுதம் அங்கத்தினராகச் சேர்ந்திருந்த மாதர் சங்கத்தில் ஐந்து மணிக்கு ஒரு விசேஷ நிகழ்ச்சிக்கு ஏற்பாடாகி யிருந்தது. குமுதத்தின் நெருங்கிய சிநேகிதி திலோத்தமா தியாகராஜன் 'மாதர் உரிமை' என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவும், ஜில்லா ஜட்ஜின் மனைவி மல்லிகா அந்தக் கூட்டத்துக்குத் தலைமை வகிக்கவும் ஒப்புக்கொண்டிருந்தார்கள். திலோத்தமா முதன் முதலாக மாதர் சங்கத்தின் ஆதரவில் பேசப் போவதைக் கேட்க வேண்டுமென்ற ஆவல் ஒருபுறம் குமுதத்தை உந்தித் தள்ளியது. மறுபுறம் தன் கணவன் காய்ச்சலோடு படுத்துக் கொண்டிருக்கும்போது அவன்கூட இருந்து ஆறுதல் அளிக்காமல் போகிறோமே என்ற எண்ணம் அடிக்கடி அவள் மனதில் எழும்பி மறைந்து கொண்டிருந்தது. கடைசியாக எப்படியும் மாதர் சங்கத்துக்குப் போய்விட்டு வந்துவிடுவது என்று நிர்மானித்தவளாய்க் குமாரசாமியிடம் தான் வெளியே போக உத்தேசித்திருப்பதைச் சொல்லாமலேயே மாடியிலிருந்து கீழ்க் கூடத்திற்கு வந்துவிட்டாள். அவள் அங்கே போவதற்கும் அவளைத் தேடி அவளுடைய மற்றொரு சிநேகிதி பத்மா அங்கே வருவதற்கும் சரியாக இருந்தது. பத்மா குமுதத்தைப் பார்த்து, "மணி நாலுக்குமேல் ஆகிவிட்டதே, கிளம்பு சீக்கிரமாக" என்று துரிதப்படுத்தினாள். குமுதம் யோசனையி லாழ்ந்திருப்பதைப் பார்த்த பத்மா "என்ன தயக்கம்!" என்றாள்.

குமுதம், "ஒன்றுமில்லை; இரண்டு நாளாக அவருக்கு ஜலதோஷம். இன்று மத்தியானம் முதல் இலேசாகக் காய்ச்சல்கூட அடிக்கிறது. மாடியில் அவர் படுத்துக் கொண்டிருக்கிறார். அவரை இந்த நிலைமையில் விட்டு விட்டுச் சங்கத்திற்குப் போவதா என்று யோசிக்கிறேன்" என்றாள்.

"அப்படியானால் இதற்காக இவ்வளவு சிரமப்பட்டு 'டிரஸ்' பண்ணிக் கொண்டிருக்க வேண்டாமே. பாவம்! இந்த யோசனை உனக்கு முன்னமேயே ஏற்படவில்லையா!" என்றாள் பத்மா கேலியாக.

பத்மாவின் கேள்வி குமுதத்திற்கு எக்கச்சக்கமாகப் பட்டது. அதற்கு என்ன பதில் சொல்லுவது என்று யோசித்துக் கொண்டிருக்கும்போதே பத்மா, "என்ன குமுதம், ஒரு வேளை உனக்குத் தெரியாமலிருக்கலாம். இப்பொழுதெல்லாம் இரண்டு நாள் காய்ச்சல் வருவதும் அது தானாகவே தணிந்து போவதும் சகஜமா யிருக்கிறது. என் தாயாருக்குக்கூட இப்படித்தா னிருந்தது. எதற்கும் நீ சங்கத்தில் வெகு நேரம்வரை தாமதிக்காமல் திரும்பி விடலாம். இன்று உன் சிநேகிதி திலோத்தமா பேசும்போது நீ வராமலிருந்தால் உன்னைப் பற்றி வித்தியாசமாக நினைத்துக் கொள்ளலாம். பிறகு உன் இஷ்டம்" என்றாள்.

குமுதம் ஒரு முடிவுக்கு வந்தவளாய்ப் பத்மாவுடன் பேசிக் கொண்டே மாதர் சங்கத்தை அடைந்தாள்.

சங்கக் காரியதரிசி சங்கரி அம்மாள் வாசலில் நின்றுகொண்டு வந்தவர்களை யெல்லாம் வரவேற்றுக் கூட்டம் நடக்க விருக்குமிடத்திற்கு அழைத்துக்கொண்டு போனாள். குமுதம் அங்கே போட்டிருந்த ஒரு நாற்காலியில் போய் அமர்ந்த கொஞ்ச நேரத்திற்கெல்லாம் சங்கத்தின் பணிப்பெண் ஒருத்தி அவளிடம் வந்து திலோத்தமா 'போனில்' அவளை அழைப்பதாகச் சொன்னாள். குமுதம் போனில் திலோத்தமாவிடம் பேசினாள். திலோத்தமா "குமுதம், என் புருஷருக்குத் திடீரென்று உடம்பு சௌகரியமில்லாமல் போய்விட்டது. அதனால் நான் இன்று செய்வதாகச் சொல்லியிருந்த பிரசங்கத்தைச் செய்ய முடியவில்லை. என்னுடைய பிரசங்கத்தை எழுதி நேற்றைக்குக் காரியதரிசி சங்கரி அம்மாள் வசம் சேர்த்து விட்டேன். அதைக் காரியதரிசியைக் கொண்டே, சபையோருக்கு என் வணக்கத்தைத் தெரிவித்து, அவர்களுடைய மன்னிப்பையும் கோருவதாகச் சொல்லிவிட்டு, என் பிரசங்கத்தையும் வாசிக்க ஏற்பாடு செய்துவிடு. சிரமத்தை நீ பொறுத்துக் கொள்" என்றாள்.

திலோத்தமா, கேட்டுக் கொண்டபடி குமுதம் காரியதரிசியைக் கொண்டு மேலே நடக்க வேண்டியதற்கு ஏற்பாடு செய்தாள். திலோத்தமாவின் பிரசங்கம் மிகவும் பிரமாதமாக

அமைந்து விட்டது. இவ்வளவு அரிய பிரசங்கத்தை அவள் நேரிலேயே வந்து நிகழ்த்த முடியாமல் போனதற்குக் கூட்டத்தின் தலைவி மல்லிகா முதற் கொண்டு எல்லா அங்கத்தினர்களும் ஏகமனதாக அனுதாபப் பட்டார்கள். கூட்டம் கலைந்ததும், குமுதம் தன் வீட்டுக்குத் திரும்புமுன் திலோத்தமாவின் ஜாகைக்குப் போய் அவளுடைய புருஷனுடைய உடம்பு நிலைமையைக் கேட்டு விசாரித்துவிட்டுப் போகலாம் என்று எண்ணிக்கொண்டு திலோத்தமாவின் வீட்டை அடைந்தாள். குமுதம், மாதர் சங்கத்தில் நடந்த நிகழ்ச்சியைச் சுருக்கமாகத் தெரிவித்துவிட்டு, திலோத்தமாவின் பிரசங்கத்திற்காக அவளைப் பாராட்டியபின் "ஆமாம், திலோத்தமா, உன் புருஷருக்கு என்ன அசௌக்கியம்!" என்று கேட்டாள்.

"அதையேன் கேட்கிறாய்! ஆபீஸிலிருந்து வந்து காரில் இறங்கினார். இறங்கும் போது கால் பிசகிக் கணுக்காலில் நன்றாகச் சுளுக்கிக் கொண்டு விட்டது. நடக்க முடியாமல் நடந்து வந்து வீட்டுக்குள் நுழைந்தார். நான் அவர் நிலைமையைப் பார்த்ததும் திடுக்கிட்டுப் போய் விட்டேன். டாக்டருக்குச் சொல்லி அனுப்பினேன். அவர் வந்து பார்த்துவிட்டு, கணுக்காலுக்கு அடிக்கடி வெந்நீர் ஒத்தடம் கொடுக்கும்படி சொல்லிவிட்டு, வேறு உள்ளுக்கு மருந்தும் எழுதிக் கொடுத்துவிட்டுப் போய் விட்டார். இந்த இக்கட்டான நிலைமையில் என் புருஷரை வீட்டில் விட்டுவிட்டுச் சங்கத்துக்குப் புறப்பட எனக்கு எப்படி மனம் வரும்! நீயே சொல்லு" என்றாள் திலோத்தமா.

காலில் அவள் கணவனுக்கு ஏற்பட்ட ஒரு சாதாரணச் சுளுக்குக்காக இவ்வளவு கவலைப் படும் திலோத்தமாவின் குணத்தையும், காய்ச்சலோடு கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் புருஷனைத் தனியாக வீட்டில் விட்டு வந்த தன் போக்கையும் ஒப்பிட்டுப் பார்த்ததும் குமுதத்தின் உள்ளம் அதிர்ச்சி யடைந்தது. "சரி திலோத்தமா, நான் வருகிறேன். என் புருஷருக்குக் கூட இன்று மத்தியானம் முதல் ஜுரம்" என்றாள்.

அதைக் கேட்டதும் திலோத்தமா, "காய்ச்சலாக இருக்கும் போது அவரை விட்டுவிட்டு எப்படி வெளிக் கிளம்பினாய்!" என்றாள் ஆச்சரியத்தோடு. திலோத்தமாவின் கேள்வி குமுதத்திற்கு அவளுடைய அசட்டுத் தனத்தை எடுத்துக் காட்டுவது போலிருந்தது!

✶

திலோத்தமாவின் வீட்டிலிருந்து புறப்பட்டுத் தன் வீட்டைக் குமுதம் அடையும் போது மணி எட்டுக்கு மேல் ஆகிவிட்டது. வாசலில் சமையற்காரி நின்று கொண்டிருந்தாள். குமுதம் வந்ததும் வராததுமாய்ச் சமையற்காரி அவளிடம் "நீங்கள் போன கொஞ்ச நேரத்திற்கெல்லாம் டாக்டர் வந்திருந்தார். அப்பொழுது உங்கள் அகத்துக்காரருக்கு காய்ச்சல் கடுமையாக இருந்தது. டாக்டர் அவரைத் தம்முடைய 'நர்ஸிங் ஹோமி'ல் சேர்த்து வைத்தியம் செய்யப் போவதாகச் சொல்லி அவருடன் கூடவே காரில் அழைத்துக் கொண்டு போய்விட்டார். நீங்கள் வந்தால் இந்தத் தகவலை உங்களிடம் தெரிவிக்கும்படி டாக்டர் சொன்னார்" என்றாள்.

சமையற்காரி தெரிவித்த சங்கதி குமுதத்தின் கவலையைப் பன்மடங்காக்கிவிட்டது. உடனே டாக்டருடைய நர்ஸிங் ஹோமை நோக்கி விரைந்தாள். அங்கே ஒரு கட்டிலில் குமாரசாமி படுத்துக் கொண்டிருந்த விதத்தைப் பார்த்ததும் திடுக்கிட்டுப் போய்விட்டாள். ஜுர வேகத்தில் உடம்பு ஒரு நிலையில் இல்லாமல் புரண்டு கொண்டிருந்தான் அவன். குமுதம் அவனுடைய உடம்பின் மேல் கையை வைத்துப் பார்த்தாள். உடம்பு அனலாகக் கொதித்துக் கொண்டிருந்தது. ஒன்றும் தோன்றாமல் நாற்காலி ஒன்றை இழுத்துக் கட்டிலின் பக்கத்தில் போட்டுக் கொண்டு உட்கார்ந்து விட்டாள். இரவு பத்து மணிக்கு டாக்டர் வந்தார். அவர் குமுதத்தைப் பார்த்ததும் "நீங்கள் போய்விட்டுக் காலையில் வாருங்கள். நாங்கள் அவரைக் கவனித்துக் கொள்ளுகிறோம்" என்றார். ஆனாலும் குமுதத்துக்குச் சமாதானமாக இல்லை. நாற்காலியிலேயே உட்கார்ந்த வண்ணம் இரவு முழுவதையும் கழித்தாள். பொழுது விடிந்ததும் காய்ச்சலின் கடுமை கொஞ்சம் குறைந்ததும் குமாரசாமி கண் விழித்துப் பார்த்தான். பக்கத்தில் குமுதம் இருந்ததைக் கண்டு "நீ எப்பொழுது வந்தாய்!" என்றான் மெல்லிய குரலில். "இரவு ஒன்பது மணிக்கு" என்றாள்.

குமுதம், "உனக்குச் சிரமம் கூடாது என்றுதானே என்னை இங்கே சேர்த்து விடும்படி டாக்டரிடம் சொன்னேன். நீ தூக்கம் விழித்து உடம்பைக் கெடுத்துக்கொள்ளாதே. நீ போய்க் குளித்துச் சாப்பிட்டு விட்டு வா" என்றான்.

குமுதம் போய்விட்டு மறுபடியும் பிற்பகல் வந்தாள். குமாரசாமி "நான்தான் முதலிலேயே சொன்னேனே, நீ தினந்தோறும் காலையிலோ, மாலையிலோ, ஒரு தடவை வந்தால் போதும். போய்விட்டுச் சாயங்காலம் வா" என்றான். குமாரசாமியின் மனப் போக்கைக் குமுதத்தினால் நிர்ணயிக்க முடியவில்லை. தன் மேலுள்ள அன்பினாலா, அல்லது வெறுப்பினாலா அவ்விதம் பேசுகிறான் என்று அவளால் அறிந்து கொள்ள முடியவில்லை. எதற்கும் அவன் விருப்பப்படியே தினம் ஒரு தடவை வந்து அவனைப் பார்த்துவிட்டுப் போய்க் கொண்டிருந்தாள். பத்து நாள் கழித்துக் காய்ச்சல் நீங்கி உடம்பு குணம் அடைந்ததும் குமாரசாமி வீட்டுக்குத் திரும்பி வந்தான். உடம்பு பலஹீனமாக இருந்த போதிலும் தவிர்க்க முடியாத அவசர அலுவல்களை முன்னிட்டு அடுத்த நாள் முதற் கொண்டே ஆபீசுக்குப் போய் வந்தான். குமுதம் வழக்கம் போல் சாயந்திர வேளைகளில் மாதர் சங்கத்துக்குப் போய்க் கொண்டிருந்தாள். அப்பொழுது அவள் சங்கத்தின் சார்பில் நடந்து கொண்டிருந்த பூப்பந்துப் போட்டியில் வேறு ஈடுபட்டிருந்தாள்.

✶

குமாரசாமி ஒவ்வொரு நாளும் ஆபீஸை விட்டுக் களைத்து வீட்டுக்கு வரும்போது அவனை வரவேற்று இன்சொல் சொல்ல

குமுதம் இல்லாததை மெதுவாக உணர ஆரம்பித்தான். பிளாஸ்கில் சமையற்காரி வைத்திருக்கும் காப்பியையும் தட்டில் தயாராயிருந்த சிற்றுண்டியையும் சாப்பிட்டுவிட்டு மாடி வராந்தாவில் சாய்வு நாற்காலியில் அமர்ந்தானென்றால் இரவு எட்டு மணிக்குத்தான் அதை விட்டு எழுந்திருப்பான். உடனே கைகால்களை அலம்பிக்கொண்டு சாப்பிட உட்காருவான். சமையற்காரி பரிமாறியதைச் சாப்பிட்டு மறுபடியும் மாடியிலுள்ள அவன் அறைக்குப் போய்விடுவான். இதற்குள் ஒவ்வொரு நாள் குமுதம் 'கிளப்'பில் இருந்து திரும்பிவிடுவாள். வந்ததும் குமாரசுவாமி யிருக்கும் இடத்திற்கு வந்து ஒப்புக்கு "இதற்குள் சாப்பிட்டு விட்டீர்களா" என்பாள். சிற்சில சமயங்களில் அதுகூடக் கேட்கமாட்டாள். இதையெல்லாம் பற்றிக் குமாரசுவாமிக்கு எவ்வளவோ அதிருப்தி. சாதாரண நாட்களில் குமுதம் அப்படியிருந்தால் அவன் அதைப் பொருட்படுத்தியிருக்க மாட்டான். அவன் காய்ச்சலோடு படுத்துக் கொண்டிருக்கும்போது அவன் தகவல் இல்லாமலேயே அவள் மாதர் சங்கத்துக்குப் போனதும், அவன் காய்ச்சல் நீங்கி உடம்பு தளர்ச்சியடைந்திருக்கும்போது அவன் சௌகரியங்களைப் பற்றி அதிக அக்கறை எடுத்துக் கொள்ளாமலிருந்ததும் அவனுக்கு மனத் தாங்கலாயிருந்தது.

ஒரு வாரம் கழிந்தது. குமாரசுவாமி ஆபீஸிலிருந்து இரண்டு மாத லீவுக்கு அனுமதி பெற்றுக்கொண்டு வீடு திரும்பினான். அன்று மாலைச் சிற்றுண்டியைச் சாப்பிட்டுவிட்டுக் குமுதத்தின் வருகைக்காக வாசலிலேயே காத்துக் கொண்டிருந்தான். இரவு மணி எட்டடித்தது.

அப்பொழுதுதான் குமுதம் மாதர் சங்கத்திலிருந்து திரும்பி வந்தாள். அவள் வலது கையில் பூப்பந்து மட்டையும் இடது கையில் அன்று நடந்த பூப்பந்து போட்டியில் வெற்றி பெற்ற வெள்ளிக் கோப்பையும் இருந்தன. குமாரசுவாமியை வாசலில் கண்டதும் குமுதம் அவனிடத்தில் சந்தோஷம் பொங்க "இன்று போட்டியில் எனக்கு இந்தக் கோப்பை கிடைத்தது" என்றாள்.

குமாரசுவாமி நிதானமாக, "ரொம்ப சந்தோஷம். அது இருக்கட்டும், குமுதம். உன்னிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டும். நாளை முதல் இரண்டு மாதத்துக்கு லீவு எடுத்துக் கொண்டிருக்கிறேன். நாளைக் காலை ரயிலில் பங்களூருக்குப் போகப் போகிறேன். அங்கே போயிருந்தால்தான் உடம்புக்கு வலுவும் மனதுக்கு நிம்மதியும் ஏற்படும் என்று தோன்றுகிறது. நான் திரும்பி வரும்வரை உனக்குச் செலவுக்காக ஐந்நூறு ரூபாய் பாங்கியிலிருந்து எடுத்து அலமாரியில் வைத்திருக்கிறேன். நான் பங்களூருக்குப் போனதும் உனக்கு அடிக்கடி கடிதம் எழுதுகிறேன்" என்று சொல்லிவிட்டு அவளுடைய பதிலுக்குக்கூடக் காத்திராமல் மாடிக்குப் போய் விட்டான்.

குமாரசுவாமியின் பேச்சைக் கேட்டதும், ஒரு கணம் திக்பிரமை அடைந்து விட்டாள் குமுதம். வீட்டிலே காணாத சந்துஷ்டியை நாடி அவர் வெளியூருக்குப் போக யோசித்திருப்பதின் காரணம் எதுவாக இருக்கலாம் என்று ஊகிப்பதில் தீவிரமாக ஈடுபட்டது அவளுடைய மனம். அடுத்த விநாடியிலேயே குமாரசுவாமியின் போக்கிற்குக்




பையன் :—கொஞ்ச நாழிகை நிம்மதியாக ராமாயணம் கேட்கலாம் என்று வந்து உட்கார்ந்தால், கேட்க விடமாட்டீர்கள் போலிருக்கிறதே! 'சள,சள' என்று பேசிக் கொண்டே இருக்கிறீர்களே!

காரணம் தன்னுடைய அசிரத்தைதான் என்று தெரிந்து கொண்டது அவளுடைய உள்ளம். இழந்த அவனுடைய அன்பை மறுபடியும் தன்னுடைய சேவையினாலேயே அடைய வேண்டுமென்ற உண்மையை அறிந்ததும் அதை அமுலுக்குக் கொண்டுவருவதில் உடனே ஈடுபட்டாள்.

பின் கட்டில் சமையற்காரி இரவுச் சமையலைத் தயாரித்து விட்டு உட்கார்ந்து கொண்டிருந்தாள். குமுதம் அவளிடம் போய் ''நீங்கள் ரொம்ப நாளாகவே உங்கள் ஊருக்குப் போய் விட்டு வரவேண்டுமென்று என்னிடம் கேட்டுக் கொண்டிருந்தீர்களே, இரண்டு மாதச் சம்பளத்தைக் கொடுத்து விடுகிறேன். நீங்கள் இன்றைக்கு இரவு ரயிலிலேயே வேண்டுமானாலும் போய்விட்டு இரண்டு மாதம் கழித்து வாருங்கள்'' என்று சொல்லி அவளிடம் இரண்டுமாதச் சம்பளத்தைக் கொடுத்தாள் குமுதம்.

பிறகு சமையலறையில் சமைத்து வைத்திருந்த பதார்த்தங்களை, முன் கட்டுக்குக் கொண்டுவந்து வைத்து, இலை போட்டுத் தயார் செய்துவிட்டு நேராக மாடியில் குமாரசுவாமியின் அறையை அடைந்தாள். அங்கே அடுத்த நாள் பிரயாணத்திற்கு வேண்டிய சாமான்களைச் சேகரிப்பதில் மூழ்கியிருந்தான் குமாரசுவாமி. அவனிடம் ''சாப்பிட இலை போட்டாகி விட்டது. வருகிறீர்களா!'' என்றாள். குமாரசுவாமி மௌனமாக இறங்கி வந்து இலையின் முன் உட்கார்ந்து சாப்பிட்டுவிட்டு அவன் அறைக்குத் திரும்பினான். குமுதம் சாப்பிட உட்கார்ந்தாள். அவளுக்குச் சாப்பாடு சரியாக ருசிக்கவில்லை.

மாடி வெளித் தாழ்வாரத்தில் நிலவொளியில் சாய்வு நாற்காலியில் குமாரசுவாமி உட்கார்ந்து கொண்டிருந்தான். குமுதம் அவன் காலடியில் போய் மெதுவாக அமர்ந்தாள். குமாரசுவாமி மௌனமாயிருந்தான். ''நாளைக்கே பங்களூருக்குப் புறப்படுவதாக உத்தேசித்து விட்டீர்களா!'' என்றாள் குமுதம்.

''ஆமாம், அனாவசியமாக இந்த ஊரிலேயே இருந்து கொண்டு வீணை வீணாக்குவானேன்!'' என்றான் குமாரசுவாமி.

''காய்ச்சலாய் இருந்து குணமாகி ஒரு வாரம் தான் ஆகிறது உங்களுக்கு. இந்த உடம்பில் நீங்கள் சரியான துணையில்லாமல் பங்களூருக்குப்போவது நல்லது என்று தோன்றுகிறதா!'' என்றாள் குமுதம்.

''என்ன குமுதம், நீ கூடவா இப்படிப் பேசுகிறாய். நான் போகப் போகிற இடத்தில் ஆஸ்பத்திரிகள் இல்லையா, டாக்டர்கள் இல்லையா, நர்சுகளுக்குப் பஞ்சமா ! இல்லை, உடம்புக்கு ஏதாவது வந்தால் பார்த்துக் கொள்ளத் தெரியாத பச்சைக் குழந்தையா நான்! அதிருக்கட்டும். எனக்குத் துணையாக யாரைக் கூட்டிக் கொண்டு போகச் சொல்லுகிறாய்! இந்த உலகத்தில் யார் யாருக்குத் துணை!'' என்றான் குமாரசுவாமி ஒரு ஏளனச் சிரிப்புடன்.

இதற்கு மேலும் குமுதத்தினால் பொறுக்க முடியவில்லை. அவள் கண்களில் நீர் சுரந்தது. அவள் குரல் தழதழத்தது. குமாரசாமியைப் பார்த்து ''நீங்கள் என்னை உங்கள் கோபம் தீர நாலு வார்த்தை பேசி விடுங்கள். வேண்டுமானால் உங்கள் கையினாலேயே இரண்டு அடி கொடுத்து விடுங்கள். இந்த மாதிரி நீங்கள் என்னைச் சொல்லாமல் சொல்லி வாட்டி வதைக்க வேண்டாம். நீங்கள் எனக்கு ஒரு குறையும் வைக்கவில்லை. நான்தான் என் உரிமைகளைப் பெற்றுக் கொண்டு என் கடமைகளைச் செய்யத் தவறி விட்டேன். ஆபீஸிலிருந்து களைத்து வரும் உங்களை நீங்கள் வரும் சமயம் வீட்டிலிருந்து உபசரித்து உங்கள் ஆயாசத்தை நீக்காமல் வெளியே போய், உங்கள் நினைவில்லாமலேயே இருந்திருக்கிறேன். நீங்கள் ஜுரமாகப் படுத்துக் கொண்டிருந்தபோது கூட உங்களிடம் ஒரு வார்த்தை சொல்லாமல் மாதர் சங்கத்திற்குப் போய்விட்டேன். நீங்கள் ஆஸ்பத்திரியிலிருந்து திரும்பி வந்தபின்கூட உங்களுக்கு நான் செய்யவேண்டிய பணிவிடைகளைச் செய்ய மறந்தேன். இவ்வளவுக்கும் என்னைப் பார்த்து நீங்கள் ஒரு கடுஞ்சொல் சொன்னது கிடையாது. நீங்கள் மனச் சாந்தியை நாடிப் பங்களூருக்குப் போகிறேன் என்றீர்கள். தாராளமாகச் செய்யுங்கள். ஆனால் ஒரு சிறிய வேண்டுகோள். உங்கள் மனச் சாந்திக்குப் பங்கம் வராமல் நானும் உங்களுடன்கூட இருந்து உங்களுக்கு சிச்ருஷை செய்ய அனுமதியுங்கள். யாருக்கு யார் துணை என்றீர்கள். நான் உங்களுக்குத் துணையாக இருக்க அருகதையற்றவள். ஆனால் உங்களைத் தவிர எனக்கு வேறு யார் துணை!'' என்றாள் விம்மல்களுக்கிடையே. அவள் கண்களிலிருந்து வழிந்த கண்ணீர்த் துளிகள் குமாரசாமியின் பாதத்தை நனைத்தன.

★

குமாரசாமி மெதுவாக எழுந்திருந்தான். அவன் அறைக்குள் சென்று ஒரு கவரை எடுத்துக் கொண்டு வந்து அதைக் குமுதத்தின் கையில் வைத்தான். குமுதம் அதைப் பிரித்துப் பார்த்தாள். அதில் பங்களூருக்குப் போவதற்கான இரண்டு இரண்டாம் வகுப்பு ரயில்வே டிக்கெட்டுகள் இருந்தன. குமாரசாமி தன் இரண்டு கைகளாலும் குமுதத்தின் முகத்தைத் தூக்கிப் பிடித்த வண்ணம் ''குமுதம் நான் எப்பொழுதுமே உன் இஷ்டத்திற்கு விரோதமாகப் போக விரும்பியதில்லை. ஒரு வேளை நீ என்னுடன் பங்களூருக்கு வர விரும்பாவிட்டால் என்ன செய்வது என்று எனக்கு ஒரு சந்தேகம். ஒருகால் நீ சம்மதித்தால் அதற்கு அனுசரணையாக இருக்கும் பொருட்டு முன் கூட்டியே உனக்கும் சேர்த்து ஒரு டிக்கெட் வாங்கிவிட்டேன்'' என்றான். ''நிஜமாகவா!'' என்று குமுதம் கேட்கும்போதே அவளுடைய சோகக் கண்ணீர் ஆனந்தக் கண்ணீராக மாறியது. குமாரசுவாமியின் முகத்திலும் புன்சிரிப்புத் தவழ்ந்தது.

ஆம்; இன்று குமுதம் குமாரசாமி இவர்களுடைய வாழ்க்கையில் புயலாக உருவாகி விடுமோ என்று பயமுறுத்திக் கொண்டிருந்த அந்தச் சம்பவம், முடிவில் பூங்காற்றாகவே பரிணமித்தது! அதற்கு முக்கிய காரணம் அவர்கள் இருவரும் வாழத் தெரிந்தவர்கள் என்பதுதான்!

# இரட்டிப்பு ஆகாரம்



குழந்தையின் வளர்ச்சி அவனுடைய ஆயுட்காலம் பூராவும் இருக்கும் திரேகத்தின் அமைப்பை ஸ்தாபிக்கின்றது. அதனால்தான் ஓர் தாயானவள், எந்த ஆகாரங்கள் குழந்தை பிறப்பதற்கு முன்னும் மற்றும் அவனுக்குப் பாலூட்டி வரும்பொழுதும் குழந்தைக்குத் திடகாத்திர வளர்ச்சியைக் கொடுக்குமோ அந்த ஆகாரங்களை முக்கியமாகச் சாப்பிடவேண்டும். தற்சமயம் கிடைக்கும் உணவுப்பொருள்களில், உடல்வளர்ச்சிக்கு அத்தியாவசியமான விடமின்கள் விசேஷமாகக் குறைந்திருக்கின்றன. ஆதலால், ஓர் தாய் அதிகப்படியான விடமின்களை உட்கொள்ளாவிடில், அவளுடைய குழந்தை நோஞ்சலாகப் பிறந்து அதைப் பராமரிப்பதற்கு மிகச் சிரமமாக இருக்கும். எம். ஜி. பி. (மெட்ராஸ் கவர்மெண்ட் பிராண்ட்) ஷார்க் லிவர் ஆயிலில் ஓர் ஆளின் நித்திய தேவைக்கு அத்தியாவசியமான பூர்ண அளவு A & D விடமின்கள் நாளொன்றுக்கு ¼ அணா செலவில் கிடைக்கும். ஓர் குழந்தைக்கு ¼ அணா செலவில் நித்தியமும் தேவையாயுள்ள இந்தப் பாதுகாப்புச் சத்துப்பொருள்கள் கிடைக்கும்.

மெட்ராஸ் கவர்மெண்ட் பிராண்ட்




## ஷார்க் லிவர் ஆயில்

ஒரு ஆளுக்குச் செலவு : நாளொன்றுக்கு ¼ அணா.

* விடமின் 'A' :— உடல் வளர்ச்சிக்கும் வலிமைக்கும் சாதகமானது. ஜலதோஷம், சின்னம்மை, நீர்க்கோள்ளுவான், உடை நீர்க்கட்டி முதலிய நோய்களைத் தடுத்து—வெட்டுக்காயம் பிருண்டியகாயம் இவைகளின்றும் விஷம் பரவாமல் பாதுகாக்கின்றது.
* விடமின் 'D' :— கணச்சூட்டைத் தவிர்க்கிறது. உறுதியான எலும்பு, பற்கள் வளர்ச்சிக்கும் ரணைக்கும் இன்றியமையாதது.

கொழுப்புகள் :— விடமின்களை பூர்ணமாய் ஜீரணிக்கத் தேவையானதும், அதிகப்படி சக்தியை கொடுப்பதற்காகவும் வேண்டிய அளவு கடலை எண்ணெய் உள்ளது.

**அடமின்**

மெட்ராஸ் கவர்மெண்ட் பிராண்ட் ஷார்க் லிவர் ஆயிலிலுள்ள கொழுப்புகள், மென்மையான ஜீரணசக்தியுடைய சமீபத்தில் பிறந்த சிசுக்களின் ஜீரணத்தைச் சீர்து பாதிக்கலாம். அப்படியாகும், முழு சாரமுள்ள அடமின் கொடுக்கவும். தினம் சில துளிகளே தேவை; அது எவ்விதமான தொந்தரவும் கொடுக்காது.

தயாரிப்பாளர்கள் :—

## கவர்மெண்ட் ஆயில் பாக்டரி, கள்ளிக்கோட்டை.

டிபார்ட்மெண்ட் ஆப் இண்டஸ்ட்ரீஸ் & காமெர்ஸ்

## கவர்மெண்ட் ஆப் மெட்ராஸ்

தென் இந்தியாவுக்கு வினியோகஸ்தர்கள்

பார் & கோ, லிட்., மெட்ராஸ்.

SSTA'S-GO 8 R—TAMIL





## ஆஸ்துமா சளி ஒரே நாளில் அகற்றப்படுகிறது

மென்டாகோ கண்டு பிடிக்கப்பட்டது முதல் மூச்சுத் திணறி, சுவாச இழுப்புடனும் ஆஸ்துமாவினால் வரும் அவதியுறவேண்டாம். மென்டாகோவை உபயோகித்தால் இன்ஜெக்ஷனும் கெடுதலான புகையும் வேண்டாம். ருசியற்ற இரு மென்டாகோ மாத்திரைகளை ஆகாரத்துடன் சாப்பிட்ட 10 நிமிஷத்தில் உடலிலுள்ள சளி உடனேயே கரைகிறது. சுலபமாக மூச்சு விடலாம். நரம்புகளுக்கு விச்ராந்தி சுவாசப் பைக்கு நன்மை. விருவிருப்பு ஏற்படும்.

### சிசுவைப்போல் அயர்ந்த நித்திரை

ஆஸ்துமாவினால் அவதியுறும் ஆயிரக்கணக்கானவர்கள் முதன் முதலில் மென்டாகோவை உட்கொண்டு சுகமடைந்தனர். இரவே ஆழ்ந்த நித்திரை செய்தனர் என்றும் கூறுகின்றனர். திட ஆரோக்யமாகவும் 5 முதல் 10 வருஷம் இளமை யடைந்ததாகவும் உணர்ந்தனர். காரணம் ஆஸ்துமாவினால் ஏற்படும் இடைஞ்சல்களை மென்டாகோ இயற்கையில் தவிர்க்கிறது. (1) சளியையும் கோழையையும் இளக்குகிறது. (2) சுவாச மார்க்கத்திலுள்ள சிறு நரம்புகளுக்குப் பலம் அளிக்கிறது. (3) தேகத்திற்கு விருவிருப்பையும் ரத்தபுஷ்டியையும் அளிக்கிறது.

### ஐந்து வருஷமாக ஆஸ்துமா இல்லை

சுலபமாக சுவாசிக்க சக்தி யளித்து சுகமான நித்திரையையும் உண்டாக்குகிறது. ஆஸ்துமா அண்டாமல் தேகத்தைப் பண்படுத்துகிறது. ஜே. ஆர். என்பவர் எழுதுகிறார்: "ஆஸ்துமாவினால் என் உயிரே போய் எடையிலும் 40 பவுண்டு குறைந்து விட்டது. இழுப்பு, இருமல், மாரடைப்பு, தூக்கமே இல்லை. சாவைத்தான் எதிர்பார்த்தேன். மென்டாகோ முதல் இரவிலேயே எனக்கிருந்த பிடிப்பை விடுவித்தது. கடந்த இரண்டு வருஷங்களாக ஆஸ்துமாவே இல்லை. மிஸஸ். ஏ. டபிள்யூ எழுதுகிறார்: "கடந்த 25 வருஷமாக எனக்கு ஆஸ்துமா உண்டு. மென்டாகோவை உபயோகித்ததிலிருந்து இரவில் நல்ல தூக்கம். பிறபாடு ஆஸ்துமா உண்டாகவே இல்லை." மிஸஸ். ஜி. ச. வி. எழுதுகிறார்: "மென்டாகோவைப் பற்றிக் கேள்விப்பட்ட நன்னாளை வாழ்த்துகிறேன். கடந்த 35 வருஷங்களாக இராத் தூக்கத்தையே அறியாத என்போன்ற ஏழை ஸ்திரீக்கு ஆண்டவன் அளித்த அமிர்தம் மென்டாகோவே. தூக்கமின்றி ஆஸ்துமாவினால் உருகிப் போகிறேன். இந்த கஷ்டங்களை யெல்லாம் இப்போது மறந்துவிட வேண்டும் என்று உணருகிறேன்."

### கைமேல் காணும் பலன்

மென்டாகோ முதல் வேளை சாப்பிட்டதுமே ரத்தத்துடன் கலந்து ஆஸ்துமாவை ஒழிக்கிறது. மென்டாகோ அதிவிரைவில் யௌவன உணர்ச்சி, பலம் இவற்றை அளிக்கிறது. வாபஸ் உத்திரவாதத்தின் கீழ் மென்டாகோ உபயோகித்துப் பார்த்து நிர்ணயியுங்கள். மென்டாகோ சாப்பிட்ட பின் பூரண குணம் பெற்று, திருப்தி யளிக்காவிடில் வெற்றுப் பெட்டியை அனுப்பினால் முழுத் தொகையும் வாபஸ் செய்யப்படும். இன்றே மருந்து வியாபாரியிடமிருந்து மென்டாகோ வாங்குங்கள். இன்றிரவு எப்படித் தூங்குகிறீர்கள், மறுநாள் காலை எவ்விதமான தெம்புணர்ச்சி ஏற்படுகிறதென்பதையும் பாருங்கள். உத்தரவாதம் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது.

**Mendaco**

மெண்டாகோ

● ஆஸ்துமா ● மார்ச்சளி நோய் ● ஹே ஜுரம் இவற்றை நிவர்த்திக்கிறது



*Perfect*
**HAIR CARE**
*with*
**CASTOROL**

காஸ்ட்ரால்

நறுமணம் கமழும் சுத்தத் தைலம் பரிசுத்தமான ஆமணக்கெண்ணெயில் தயாரிக்கப் பட்டது. கூந்தலுக்கு அடர்த்தியான வளர்ச்சியை அளிக்கிறது

A CALCHEMICO PRODUCT

மதராஸ் ஆபீஸ்:

5/149, பிராட்வே, ஜி. டி., மதராஸ்

*Each Drop of*
**SUGARINE**
PUTS **NEW LIFE**
*into a patient of*



**DIABETES**

மிகக் கொடிய நிலையிலுள்ள டியாபெடிஸ் வியாதிக்கு 'ஷுகரைன்' ஓர் சிறந்த ஔஷதம். நோய் குணமாகாதென நம்பிக்கையை இழந்தோரும் 'ஷுகரைன்' உட்கொள்ளலாம். முதல் நாளே நீர்க் கழிவின் எண்ணிக்கையிலும் அளவிலும் குறைவு ஏற்படும். சில தினங்களிலேயே நீரிலுள்ள சர்க்கரை சத்தைக் குறைத்து சம நிலைக்குக் கொண்டு வரும். மருந்து சாப்பிட ஆரம்பித்த உடனேயே தாக உணர்ச்சி மறைகிறது. தேகத்தின் மீது ஏற்படும் நமைச்சலும், அதனால் பரவும் படை முதலிய சரும நோய்களும் மாயமாக மறையும். உணவில் பத்தியம் (கட்டுப்பாடு) இன்ஜெக்ஷன் முதலிய தொல்லைகளும் கிடையாது. மருந்து உட்கொண்ட சில நாட்களிலேயே கொடியதும், குணப்படுத்த முடியாதென குறிப்பிடப்படும் இந்த வியாதியை பூரண குணமடையச் செய்யும்.

**ஒரு பாட்டில் விலை ரூ. 10**

தபாற் செலவு தனி

குணமில்லையென நிரூபித்து, காலிப் பெட்டியை வாபஸ் செய்பவர்களுக்குப் பணம் திரும்பக் கொடுக்கப்படும்.

(கெமிஸ்டுகள் வியாபார நிபந்தனைகளுக்கு எழுதவும்)

**MAYOR & BROOKS**
LABORATORIES (K. M.) JULLUNDUR
Telegrams: SERVICE

# பிளாண்டர்ஸ்
ஹை க்ரோன்
நீலகிரித்
# தேயிலை




நீங்கள்
ரசிக்கக்கூடிய
ருசிக்காக

THE PLANTERS COMPANY, LTD.,
COONOOR. NILGRIS S INDIA.

## அதி அற்புத ரகங்கள் !

புகழ் பெற்ற ஸ்விஸ் பாக்டரிகளில் தயாரானது
ஒவ்வொன்றும் 5 வருஷ உத்திரவாத முள்ளவை



6 ஜுவல் க்ரோம் 30/- ரோல்டுகோல்டு 33/-
7 ,, க்ரோம் 35/- உயர் ரகம் 38/-
15 ,, க்ரோம் 44/- ரோல்டுகோல்டு 48/-



6 ஜுவல் க்ரோம் 28/- ரோல்டுகோல்டு 33/-
7 ,, க்ரோம் 33/- உயர் ரகம் 35/-
15 ,, க்ரோம் 42/- ரோல்டுகோல்டு 45/-



முழுவதும் ஜுவல் 19/- உயர் ரகம் 21/-
ரேடியத்துடன் 21/- சென். செகண்டு 23/-
ஸ்பெஷல் உயர்ந்த ரக மெஷின் 27/-



6 ஜுவல் க்ரோம் 26/- ரோல்டு கோல்டு 32/-
7 ,, க்ரோம் 32/- ரோல்டு கோல்டு 36/-
15 ,, க்ரோம் 48/- ரோல்டு கோல்டு 58/-



6 ஜுவல் க்ரோம் 22/- உயர் ரகம் 25/-
5 ,, ரோல்டு கோல்டு 30/- உயர் ரகம் 33/-
15 ,, க்ரோம் 45/- ரோல்டு கோல்டு 55/-

டைம் பீஸ் 20/- உயர் ரகம் 25/-
பாக்கெட் வாட்ச் 12/- உயர் ரகம் 15/-

*தபாற் செலவு பிரத்தியேகம். இரண்டு கடிகாரங்கள் ஆர்டருக்கு தபாற் செலவு இனாம்*

*

**PIONEER WATCH CO.**
POST BOX No. 11428 - CALCUTTA



# நோய் பலவீனத்தை உண்டாக்கும் -



ஆனால் ருசிமிக்க ஓவல்டின்
மீண்டும் ஆரோக்யம் பெற உதவும்!

நோயும் ஜுரமும் உடம்பை பலவீனப் படுத்தும்போது, சுலபமாக ஜீரணித்து அதிகமான புஷ்டி தரும் உணவு அவசியம்.

பலவீனம் நீங்கி ஆரோக்யம் பெற "ஓவல்டின்" இணையற்ற உணவு-பானம் என்று உலக முழுவதிலுமுள்ள டாக்டர்களும், நர்ஸ்களும் சிபார்சு செய்கின்றனர். அது சாப்பிட ருசியானது சுலபமாக ஜீரணமாகும். தவிர நிறைந்த புஷ்டியுள்ள உணவு ஆகையால் பலவீனமுள்ள உடலுக்கு அவசியமான போஷாக்கையளிக்கும்.

ஓவல்டினில் ஜீவசக்தியளிக்கும் குணமுள்ள பழுத்த பார்லி மால்ட்டும், சுத்தமான பட்டுப்பாலும் விசேஷமாகத் தயாரித்த கோக்கோவும், இருப்பதுடன் மதிப்புவாய்ந்த இயற்கை பாஸ்படைட்களும் விடமின்களும் சேர்ந்துள்ளன.

ஓவல்டின் என்ற பெயருள்ளது இது ஒன்றுதான். இது இணையற்ற ஒரு தனிவகையைச் சார்ந்தது.

## 'OVALTINE'

## ஓ வ ல் டி ன்

உலகில் மிகப் பிரசித்திபெற்ற உணவு பானம்.




விநியோகஸ்தர்கள்:— கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிட்.,

OV.301.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladers Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

# நீரிழிவு

## ஏழு நாட்களில்

## குணமாகும்!

எவ்வளவு நாட்பட்டதாயினும், மிகக் கடுமையாக இருப்பினும் நவீன ரஸாயன முறைத் தயாரிப்பான வீனஸ் சார்ம் வியாதியை முற்றிலும் குணமாக்கிவிடும். அடங்காத பசி, மரண தாகம், அடிக்கடி சிறுநீர் பிரிதல், சொரி சிறங்கு ஆகிய இவைகளே இவ் வியாதியின் முக்கிய அறிகுறிகள். இதை கவனிப்பின்றி விட்டு விட்டால் கட்டி, பிளவை, கண் கோளாறு முதலிய உபத்திரவங்களில் முடியும். வீனஸ் சார்ம் ஆயிரக் கணக்கானவர்களை மரிப்பினின்றும் பிழைக்க உதவியுள்ளது. உபயோகித்த மறு தினமே நீரிலுள்ள சர்க்கரைச் சத்தைக் குறைத்து இதமளிக்கும். இரண்டு மூன்று தினங்களில் பாதி குணமடைந்ததாக நீங்களே உணர்வீர்கள். ஆகார நிபந்தனை கிடையாது. இலவசமான விபரங்கள் அடங்கிய காட்லாகிற்கு எழுதவும்.

50 மாத்திரைகள் கொண்ட பாட்டில் ரூ. 6-12-0

(தபாற் செலவு இலவசம்)

**வீனஸ் ரிஸர்ச் லாபரடரி (K M.)**

தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா.






சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டுகள்:

சூராஜ் ஏஜன்ஸீஸ்

10, ஜானிபாட்சா சாஹிப் தெரு, சென்னை-14

கோவை, பாலக்காடு அண்டு நீலகிரிக்கு சோல் ஏஜண்டுகள்:

B. பாலபட்டாபி செட்டியார்

346, வைசியாள் தெரு - கோயமுத்தூர்

ஸ்டாக்கிஸ்டுகள்:

மெஸர்ஸ். சண்டிகா & கோ.,

முதல் அக்ரஹாரம் சேலம் டவுன்


"நான் என் உணவை எப்பொழுதும்
டால்டாவில்
சமைத்திருக்க விரும்புகிறேன்
அது என் தினசரி செலவாகிர
சக்தியை,திரும்பப்பெற உதவுகிறது"
DALDA
HYDROGENATED GROUNDNUT AND TIL OIL
डालडा
சமச்சீர் உணவில் உங்களுக்குத்தேவையான கொழுப்பைக் கொடுக்கிறது
HVM. 139-172 TM